# காலமெதுவாயினும் கோலாகலம் தரும் கோகா-கோலா!

உல்லாச சவாரியின் இன்பம் பன்மடங்கு பெருகுகிறது, கோகா-கோலா பருகும்போது! கோகா-கோலாவின் சுவை, உள்ளத்தைக் கிளுகிளுக்க வைக்கும் விறுவிறுப்பான சுவை...பருகப் பருகத் தெவிட்டாத தீஞ்சுவை! கோகா-கோலா...மீண்டும் கோகா-கோலா...மறுபடியும் கோகா-கோலா! உலகெங்கும், கோகா-கோலா அருந்துவோரின் எண்ணிக்கை பெருகி வருகிறது. ஏனெனில், கோகா-கோலாவைப் போல புத்துணர்வூட்டுவது வேறு எதுவுமே இல்லை!




கோகா-கோலா, கோகா-கோலா கம்பெனியின் ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க்

CMCC-16.162-TAM







"அண்ணா"
அவர்களின் வாழ்க்கையின்
தத்துவத்தை
பலகோணங்களில்
சித்தரிக்கும் நினைவுச்
சின்னமான
வாக்குவம்
ஃப்ளாஸ்க்




விக்டரி ஃப்ளாஸ்க் கம்பெனி ப்ரைவேட் லிட்.
பம்பாய் • கல்கத்தா • டெல்லி • மதராஸ் • ஹைதராபாத்

VAPI-VF-70







ஸாத்தே குளுகோஸ் பிஸ்கெட்டுகளின்
தரம் அப்படி! தூய பொருள்
களிலிருந்து தயாரிக்கப்பட்டவை-
புரதச்சத்து நிறைந்த கோதுமை மாவு,
பாலேடு மற்றும் சக்தி செறிந்த
குளுகோஸ்! இவற்றை ஒருங்கே
கொண்டு பொன்னிறத்தில்
கிடைக்கின்றன. சிறப்பான பாக்கிங்கில்
வருவதால் என்றென்றும் புதுமை,
சுவையோ அலாதி!




ஸாத்தே பிஸ்கெட்டுகள் திருப்தி அளிக்கின்றன.

# கல்கி பொருளடக்கம்



சாதாரண, புரட்டாசி 4 :: 1970 செப்டம்பர் 20



அட்டைப்படம்: 'சிதம்பர ரகசியம்' (சித்திரத் தொடர்கதை)

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

# ‘அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரே போல் கெட்டிக்காரி!’

ஹார்லிக்ஸ் அவளைக் கெட்டிக்காரியாக மாற்றிற்று!

வளரும் குழந்தைகளுக்கு தெம்புடன் திகழத் தேவையான அதிக சக்தியை அளிக்க ஹார்லிக்ஸ் உதவுகிறது. டாக்டர்கள் குழந்தைகளுக்கு ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறார்கள். உங்கள் மகளுக்கும் ஹார்லிக்ஸ் தேவை!



ஆனால், சில நாட்களுக்கு முன் அவளுக்கு ஒரே மந்தம். நான் டாக்டரை விசாரித்தேன்.

டாக்டர் சொன்னார்: “அவளுக்கு தினமும் ஹார்லிக்ஸ் கொடுங்கள்.”

ஹார்லிக்ஸ் சாப்பிட்ட பின் அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரேபோல் கெட்டிக்காரியாக மாறிவிட்டாள்!



ஆடைச் சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்ட்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்ந்தது




# ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# யார் மறு பரிசீலனை செய்ய வேண்டும்?

சென்றவாரம் ஸ்ரீ கருணாநிதி மந்திரி சபையில் நம்பிக்கை இல்லை என்ற தீர்மானம் தமிழக சட்டசபையில் விவாதிக்கப்பட்டது. அந்தத் தீர்மானம் நிறைவேறி மந்திரி சபை கவிழ்ந்து போகும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. விவாதத்தின்போது ஸ்ரீமதி இந்திரா காந்தியின் புதுக் காங்கிரஸ் அங்கத்தினர்கள் தீர்மானத்தை எதிர்த்தார்கள். அதாவது தி. மு. க. நிர்வாகத்தில் நம்பிக்கை வைத்திருப்பதை அவர்கள் தெரிவித்தார்கள். எனினும் அதன் மீது வோட்டு எடுக்கப்பட்ட போது அவர்களில் எவரும் சட்டசபையில் ஆஜராய் இருக்கவில்லை. இதையொட்டி ஸ்ரீ கருணாநிதி, இனி நாடாளுமன்றத்தில் வோட்டு எடுக்கும் சமயத்தில் தி.மு.க. அங்கத்தினர்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு இது தங்களுக்கு ஒரு பாடம் என்றார்.

ஸ்ரீமதி இந்திரா காந்திக்குத் திராவிட முன்னேற்றக் கழகம் இதுவரை முழு ஆதரவு அளித்து வந்திருக்கிறது. அக்கட்சியைச் சேர்ந்த இருபத்துநான்கு நாடாளுமன்ற அங்கத்தினர்கள் அவருக்கு விசேஷ பக்க பலமாக இருந்து வந்தனர். அவர்களது ஆதரவு இல்லாவிட்டால் கம்யூனிஸ்டு கட்சிகளையே ஸ்ரீமதி இந்திரா காந்தி முழுக்க முழுக்க நம்பியிருக்க வேண்டி நேரிடும். ராஜ மானிய ஒழிப்பு மசோதாவை தி.மு.க.வினர் முழுமூச்சுடன் ஆதரிக்காமல் இருந்திருந்தால் அது லோக சபையில் நிறைவேறியே இருக்காது.

ஸ்ரீ கருணாநிதியின் கோரிக்கைகள் பலவற்றுக்குப் பிரதம மந்திரி இணங்கியே வந்திருக்கிறார் என்பது உலகமறிந்த விஷயம். அப்படியிருக்க ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு தி. மு. க. வின் ஆதரவு நீடிப்பது பற்றி மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று பொருள்பட ஸ்ரீ கருணாநிதி பேசியது ஸ்ரீமதி இந்திரா காந்தியிடமிருந்து இன்னும் அதிகமான சலுகைகளைப் பெற வேண்டும் என்பதற்காகவே இருக்கலாம்.

சட்டசபையில் 'நம்பிக்கையில்லாத் தீர்மானம் விவாதத்தில் இருந்தபோது, தேர்தல் காலத்துக் கூட்டு ஏற்பாட்டை முறித்துக் கொள்வதற்குமுன் இருமுறை சிந்தித்து மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று தமக்கே உரிய வழக்கமான மரியாதைப் பாணியில் ராஜாஜியை முதலமைச்சர் கேட்டுக் கொண்டார். அதே சமயத்தில் வேறு ஒன்றையும் அவர் கூறியிருக்கிறார். தி. மு. க.வுடன் இருந்து வரும் உறவு முறிந்தால் அதனால் நஷ்டமடையப் போவது சுதந்திரக் கட்சியே தவிர தி. மு. க. அல்ல என்று அவர் கூறியிருக்கிறார். லாப நஷ்டக் கணக்கிற்கு இதில் இடமே இல்லை. நாட்டுக்கு எது நன்மையோ அதுதான் முக்கியம். நாட்டுக்கு இப்போது அவசியமாக, அவசரமாகத் தேவைப்படுவது ஜனநாயக சக்திகள் அனைத்தும் ஒன்றாக இணைந்து, ஸ்ரீமதி இந்திரா காந்தி கங்கணம் கட்டிக் கொண்டு மும்முரமாக வளர்த்து வரும் கம்யூனிஸ்டு முன்னேற்றத்தையும் சர்வாதிகாரப் போக்கையும் எதிர்த்துத் தடுத்து நிறுத்துவதேயாகும். இதற்குத் தடையாக நிற்பது தமிழ்நாடு அரசும், அதன் இருபத்துநான்கு பாராளுமன்ற 'அங்கத்தினர்களும். இதனால்தான் தமிழ்நாட்டில் தி. மு. க.வின் கூட்டுறவில் சுதந்திரக் கட்சியினர் தங்கள் அதிருப்தியைக் காட்டி வருகிறார்கள்.

ஸ்ரீமதி இந்திரா காந்தியின் கொள்கைகளும் ஏதேச்சாதிகார நடத்தையும் நமது பாரத நாட்டை கம்யூனிஸப் பாதையில் இட்டுச் செல்கிறது என்றும் இதற்கு தி. மு. க. தன்னுடைய ஆதரவை அளித்து வருவது விவேகமாகாது என்றும் ராஜாஜி இவ்வளவு காலமாகத் திரும்பத் திரும்பச் சொல்லி வந்திருக்கிறார். இதை தமிழக முதல்வர் இப்போதாவது சரியாகத் தெரிந்து கொண்டு ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு தி. மு. க. அளித்து வரும் ஆதரவை மறு பரிசீலனை செய்ய வேண்டியிருக்கும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

"சுதந்திரத்துக்கே முதலிடம்" (Freedom First) என்ற சஞ்சிகையில் நிலப் பசியைப் பற்றி ஸ்ரீ வி. பி. கார்னிக் எழுதியிருக்கிறார். நாட்டில் நிலப் பசி மிகுதியாக இருக்கிறது என்றும் அதைத் தீர்த்து வைக்க உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் இடது சாரி பிரசாரகர்களும் ராஜீயவாதிகளும் பேசி வருவதைச் சுட்டிக்காட்டி ஸ்ரீ கார்னிக் எழுதியிருக்கிறார். கிராமங்களில் பசி இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது நிலப்பசி அல்ல. பயனுள்ள வேலை வேண்டும் என்ற பசிதான் மிகுதியாக உள்ளது என்கிறார் ஸ்ரீ கார்னிக். இன்றைய அவசியமான தேவை விளைநிலங்களை மேலும் மேலும் துண்டு துண்டாகக் கூறு போடுவது அல்ல. இறமையான சாகுபடிக்கு ஏற்பப் பெரிய பண்ணைகளாகச் சிறு துண்டு நிலங்களை இணைய வேண்டுமென்பதுதான் இன்றையத் தேவை. நிலம் இல்லாதவரிடையே நிலத்தை விநியோகித்தால் சாகுபடி கட்டுப்படி ஆகாத அளவுக்குப் பண்ணைகள் சுருங்கிவிடும். இப்பொழுதே பயிர்த் தொழிலில் உள்ள எல்லோரும் லாபத்தை முன்னிட்டு அதில் ஈடுபடுபவர்கள் அல்ல. பிழைப்புக்கு வேறு வழி இல்லை என்பதால்தான் பயிர் செய்கிறார்கள் என்பதை ஸ்ரீ கார்னிக் எடுத்துக் கூறுகிறார். கட்டுப்படியாகக்கூடிய பண்ணையின் விஸ்தீரணம் இடத்துக்கு இடம் மாறுபட்டு இருக்கும். அது பாசன வசதிகளையும் பொறுத்தது. பயிர்த் தொழில் பாழாகி விடாமல் இருக்க வேண்டுமானால் அது மேலும் செழித்துக் கொழிக்க வேண்டுமானால், பண்ணையின் விஸ்தீரணம், சாகுபடி கட்டுப்படியாகக் கூடிய அளவுக்குக் குறையாமல் இருக்கும்படி பார்த்துக்கொள்வது அவசியம் என்கிறார் ஸ்ரீ கார்னிக்.

கொஞ்ச நஞ்சம் கிடைக்கக் கூடிய உபரி நிலத்தைத் தேவையுள்ள நிலமில்லாதார்க்கு விநியோகிப்பது சிரமமல்ல. ஆனால் இறம்படப் பயிர் செய்வதற்கு வேண்டிய வசதிகள் அவர்களுக்குக் கிடைக்கச் செய்வது பத்துமடங்கு அதிக கஷ்டம் உள்ளது என்பதை ஸ்ரீ கார்னிக் விளக்குகிறார்.

★

உத்தரப் பிரதேச முதலமைச்சர் ஸ்ரீ சரண் சிங் அங்கு உள்ள புது காங்கிரஸ் கட்சிக்கு நல்ல படிப்பினைகளைப் புகட்டி வருகிறார். மந்திரி சபையில் கூட இருந்து கொண்டே அவருக்கு எதிராக அந்தக் கட்சி செயல்பட்டு வருகிறது; ஆனால் அது என்ன செய்தாலும் செய்யட்டும் என்று பொருட் படுத்தாமல் அவர் இருந்து வருகிறார். மொத்தத்தில் தமது பலத்தைப் பிரதம மந்திரி உணரும்படி அவர் செய்து வருகிறார். லோக் சபையில் தாம் அடையும் வெற்றிகளைக் கண்டு அற்ப சந்தோஷமடையும் பிரதமர், வெளியே உள்ள நிலவரத்தைப் புரிந்து கொள்வதற்கு ஸ்ரீ சரண் சிங்கின் மனப்பான்மை துணைபுரிகிறது. ஸ்ரீ சரண் சிங் முற்றிலும் நம்பகமான மனிதர் அல்ல. எனினும் ஸ்ரீமதி இந்திரா காந்தி தெரிந்துகொள்ள வேண்டிய சில படிப்பினைகளை அவரால் அறிவுறுத்த முடிகிறது.



## செல்வன் : தியாகராஜன் — செல்வி : உஷா

மணமகன், கல்கி ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம் தம்பதியரின் சுவிகாரப் புதல்வன் செல்வன் தியாகராஜன். மணமகள், ஆல்வாம் ஃபோக்ட் ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். சுந்தரம் அவர்களது அருமைக் குமாரி செல்வி உஷா.

இம் மாதம் பத்தாம் தேதி திருநீர்மலையில் இவர்களது விவாகம் விமரிசையாக நடந்தேறியது. அன்று மாலை கல்கி காரியாலயப் பூங்காவில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்துக்கும் விருந்துக்கும் ஆயிரக்கணக்கான நண்பர்கள் வந்திருந்தனர். தலைவர் ராஜாஜி, மாநில கவர்னர் சர்தார் உஜ்ஜல் சிங் உள்பட நகரப் பிரமுகர்களும் அன்பர்களும் ஏராளமாய் வந்திருந்து மணமக்களை வாழ்த்தி மகிழ்ந்தார்கள்.

பல்லாண்டு இல்லறம் பயனுற நடத்த நல்லாசி கூறி நெஞ்சார வாழ்த்துகிறோம்.

# என்ன சேதி?

## டாக்டர் சதாசிவம் மறைவு

சஸ்திர சிகிச்சை நிபுணர் டாக்டர் ஸி. எஸ். சதாசிவம் அவர்கள் திடீர் மறைவு கேட்டு வருந்துகிறோம். டாக்டர் சதாசிவம் அவர்கள் தமது தொழில் திறமையால் பெரும் புகழும் பெற்றிருந்தார். காலஞ்சென்ற தமிழக முதல்வர் திரு ஸி. என். அண்ணாதுரை அவர்கள் சஸ்திர சிகிச்சைக்காக அமெரிக்கா சென்ற போது உடன்சென்று அரும் பணியாற்றினார் அவர். மீண்டும் அண்ணாதுரை உடல் நலிவுற்று யமனுடன் போராடிய இறுதி நாட்களில் திரு சதாசிவம் இரவு பகல் என்று பாராமல் அண்ணாவின் உயிரைக் காப்பாற்ற எடுத்துக் கொண்ட முயற்சிகளை யாரும் மறக்க முடியாது. இப்படி எடுத்த பணியில் ஒருமனப்பட்டு வேலை செய்து வந்த பெரும் வைத்திய நிபுணரின் மறைவு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும். மருத்துவத் துறையில் அரிய சாதனைகளை நிகழ்த்தியவர். அவர் பிரிவால் வருந்தும் அவரது குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## விமான மறித்தல்

"பாலஸ்தீனத்தின் விடுதலைக்கான மக்கள் அணி" என்ற பெயரில் இயங்கும் ஒரு படை மேற்கு ஆசியாவில் சர்வதேச பிரயாண விமானங்களை மறித்து, கீழே இறக்கி, பிரயாணிகளைப் பணயக் கைதிகளாகப் பிடித்து வைத்திருக்கிறது. இது பெரும் அளவில் நடந்திருக்கிறது. ஆயுதபாணிகளான பயங்கர இயக்கத்தினர் யுத்த கால நடைமுறைகளை இம்மாதிரி விரிவுபடுத்துவது மோசமான நிலைமையாகும். வன்முறைகளினின்று விமானிகளைக் காப்பாற்றுவதற்காக ஒவ்வொரு விமானத்திலும் பாதுகாப்புக் குழு ஒன்றை வைத்திருக்கவேண்டிய அவசியம் இதனால் ஏற்படுகிறது. இம்மாதிரி நிலைமை நீடித்தால் சாதாரண பிரயாணிகள் சர்வதேசப் போக்குவரத்து விமானங்களில் சென்றுவரத் தயங்குவார்கள்.






இருபத்து மூன்றாம் அத்தியாயம்

## ஊமையும் பேசுமோ?

அநிருத்தர் சற்று நேரம் பூங்குழலியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, அவளைக் கொண்டு வந்த தாதிமார்களை அருகில் அழைத்தார்.

அவர்களிடம் மெல்லிய குரலில் ஏதோ கேட்டார். அவர்கள் மறுமொழி சொன்ன பிறகு அந்த அறையை விட்டு அப்பால் போகச் செய்தார்.

ஆழ்வார்க்கடியானைப் பார்த்து "திருமலை! ஏதோ தவறு நேர்ந்திருப்பதாகத் தோன்றுகிறது!" என்றார்.

"ஆம், ஐயா! அப்படித்தான் எனக்கும் தோன்றுகிறது!" என்றான் சீடன்.

"இவள் இளம் பெண். சுமார் இருபது பிராயம்தான் இருக்கலாம்."

"அவ்வளவு கூட இராது."

"நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மாதரசிக்குப் பிராயம் நாற்பது இருக்க வேண்டும்."

"அதற்கு மேலேயும் இருக்கும்."

"ஆம்; ஆம். நீ இலங்கைத் தீவில் மந்தாகினி தேவியைப் பார்த்திருக்கிறாய் அல்லவா?"

"ஆம்; ஐயா! பார்த்து, தங்கள் கட்டளைப்படி இங்கு அழைத்து வரவும் முயன்றேன்; முடியவில்லை."

"இந்தப் பெண் மந்தாகினிதேவி அல்லவே?"

"இல்லை, குருதேவரே! நிச்சயமாக அந்த அம்மையார் இல்லை!"

"அப்படியானால் இவள் யாராயிருக்கும்? எப்படி இங்கு வந்து சேர்ந்தாள்?"

"இவளையே கேட்டுவிட்டால் போகிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஊமையிடம் கேட்டு என்ன பயன்?"

"குருதேவரே! இவள் ஊமைதான் என்பது..."

"அதைத்தான் தாதிமார்களிடம் கேட்டேன். இங்கு வந்ததிலிருந்து இவள் ஒன்றும் பேசவில்லை என்றார்கள்."

"குருதேவரே! இவளை அடையாளம் கண்டு அழைத்து வருவதற்கு யாரை அனுப்பி யிருந்தீர்கள்?"

"ஆகா! அந்த மூடன் ஏதாவது தவறு செய்துவிட்டானா, என்ன?"

"எந்த மூடன் குருதேவரே! தாங்கள் இத்தகைய காரியங்களுக்கு மூடனை அனுப்பி வைத்திருப்பீர்களா?"

"புத்திசாலியாகக் காணப்பட்டான். பழையாறைக்கு நாம் சென்றிருந்த அன்று, வாணர் குலத்து வல்லவரைய

னுடன் ஒரு வாலிபன் சண்டையிட்டா னல்லவா?''

''ஆம்; பழையாறை வைத்தியர் மகன் பினகபாணி.''

''அவனேதான்! உன்னையும் வல்ல வரையனையும் கரிகாலரைச் சந்திக்க அனுப்பிய பிறகு, அந்த வைத்தியர் மகனைச் சிறையிலிருந்து விடுதலை செய்து அழைத்து வரப் பண்ணினேன். நம் ஒற்றர் படைக்குத் தகுந்தவன் என்று கண்டு, அவனைக் கோடிக்கரைக்கு அனுப்பினேன். முன்னம் அவன் கோடிக் கரைக்குப் போய்ப் பழக்கப்பட்ட வனும்....''

''அவன்தான் இந்தப் பெண்ணை இங்கு அழைத்து வந்தானு?''

''அடையாளம் எல்லாம் சரியாகச் சொல்லி அனுப்பினேன். அவனும் திருவையாற்றில் கொண்டு வந்து சேர்த்து விட்டுக் காரியம் வெற்றி என்று செய்தி அனுப்பி யிருந்தான்...''

''ஐயா! நான் தோற்றுப்போன காரி யத்தில் வெற்றியடைந்த அந்தப் புத்தி சாலி ஒற்றன் இப்போது எங்கே? இந் தப் பெண்ணைக் குறித்து அவனையே கேட்டுவிடுவது நல்லது அல்லவா?''

''நல்லதுதான்; ஆனல் நேற்றிரவு அவனுக்கு எதிர்பாராமல் ஒரு விபத்து நேர்ந்து விட்டது...''

''அடாடா! அவனுக்கு என்ன விபத்து, எப்படி நேர்ந்தது?''

''சிவிகையின் பின்னல் அவனும் வந்து கொண்டிருந்தான். இருட்டிய பிறகு கோட்டைக்கு வர வேண்டும் என்று நான் கட்டளை யிட்டிருந்தபடி யால், அந்தப்படியே அந்தி மாலை நேரத் தில் திருவையாற்றி லிருந்து புறப்பட்டு, முன்னிரவு வேளையில் கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். இடி ரென்று புயல் அடித்த செய்திதான் உனக்குத் தெரிந்திருக்குமே?...''

''ஆம், ஐயா! நான்கூடப் புயலுக்குப் பயந்து சாலை ஓரத்து யாத்திரை மண்ட பம் ஒன்றில் சிறிது நேரம் தங்கியிருக் கும்படி நேர்ந்தது.''

''கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் சிவிகை வந்தபோது சாலையில் பெரிய மரம் ஒன்று வேரோடு பெயர்ந்து விழுந்து விட்டது. அதிர்ஷ்ட வசமாகப் பல்லக்கின் மீது விழாமல் பின்னல் வந்தவர்கள் மீது விழுந்தது. வைத் தியர் மகன் பினகபாணி விழுந்த மரத் தடியில் அகப்பட்டுக் கொண்டான்!''

இவ்வாறு முதன் மந்திரி கூறிய போது, ஒரு பெண் குரல், ''அந்தச் சண்டாளன் தலையில் மரம் மட்டுந்தானு விழுந்தது? இடி விழவில்லையா?'' என்று ஆத்திரத்துடன் கூறியது கேட்டது.

முதன் மந்திரி அநிருத்தர் அளவில்லா வியப்புடன் பூங்குழலியை நோக்கினர். அவளை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''திருமலை இப்போது பேசியவள் இந்தப் பெண்தானு?'' என்ருர்.

''ஆம் ஐயா! அப்படித்தான் தோன் றியது.''

''இது என்ன விந்தை? செவிட்டுக்குக் காது கேட்குமா? ஊமையும் பேசுமா?'' என்ருர் அநிருத்தர்.

''செவிட்டுக்குக் காது கேட்பதும், ஊமை பேசுவதும் மிகவும் விந்தையான காரியங்கள்தாம். ஆனல் சர்வ சக்தி வாய்ந்த விஷ்ணு மூர்த்தியின் பக்த ராகிய தாங்கள் மனம் வைத்தால் எந்த அற்புதந்தான் நடவாது? ஆழ்வார் திருவாய் மலர்ந்திருப்பது என்ன வென்ருல்...''

''போதும்! ஆழ்வார்களை இப்போது இங்கே இழுத்துத் தொந்தரவு செய் யாதே! இது விஷ்ணு பகவானின் கருணை யினல் நடந்தது அல்ல. ஏதோ தவறு நடந்திருக்கிறது. இந்தப் பெண்பிள்ளை நம்மை ஏமாற்றி யிருக்கிருள். இவள் யார்? இவளுடைய நோக்கம் என்ன? எதற்காக இவள் இத்தனை நேரமும் செவிட்டு ஊமை போல நடித்தாள்?''

''குருதேவரே! இந்தப் பெண்ணையே கேட்டு விடலாமே?''

''அப்பனே! உன் முகத்தில் தவழும் புன்னகையைப் பார்த்தால் உனக்கு ஒரு வேளை தெரிந்திருக்கக் கூடுமோ என்று தோன்றுகிறது. சரி, இவளையே கேட்டு விடுகிறேன். பெண்ணே! நீ செவிடு இல்லையா? நான் பேசுவது உனக்குக் காது கேட்கிறதா?''

''ஐயா! நான் செவிடா யிருக்கக் கூடாதா என்று சில சமயம் விரும்பிய துண்டு. ஆனல் எனக்குக் காது கேட் பது பற்றி இப்போது சந்தோஷப்படு கிறேன். அந்தச் சண்டாளன் வைத் தியர் மகன் தலையில் மரம் ஒடிந்து விழுந்த செய்தியைக் கேட்டேன் அல் லவா? சுவாமி! அவன் செத்து ஒழிந் தானு?'' என்ருள் பூங்குழலி.

''ஆகா! உனக்குக் காது கேட்கிறது. பேசவும் பேசுகிருய். நீ ஊமை அல்ல!'' என்ருர் அநிருத்தர்.

''நிச்சயமாக இந்தப் பெண் ஊமை இல்லை!'' என்ருன் சீடன்.

''ஆகா! நான் ஊமையில்லை என்ப தைக் கண்டுபிடித்து விட்டீர்களே! சோழ சாம்ராஜ்யத்திலேயே மிக்க அறி வாளி முதன் மந்திரி அநிருத்தப் பிரம்ம ராயர் என்று நான் கேள்விப்பட்டது சரிதான்!'' என்ருள் பூங்குழலி.

''பெண்ணே! என்னைப் பரிகாசமா செய்கிறாய்? ஜாக்கிரதை! நீ ஊமையில்லாவிட்டால் நேற்று இரவு இங்கு வந்ததிலிருந்து பேசாமலிருந்தது ஏன்? ஊமைபோல் நடித்தது ஏன்? உண்மையைச் சொல்லு!'' என்று கேட்டார் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மாதிராயர்.

''ஐயா! நேற்றிரவு இங்கு நான் வந்து சேர்ந்தவரையில் பேசத் தெரிந்தவளாகவே இருந்தேன். என்னை 'வாயாடி' என்றுகூடச் சிலர் சொல்வதுண்டு. முதன் மந்திரியின் அரண்மனையைப் பார்த்து, இங்கு எனக்கு நடந்த இராஜோபசாரங்களைப் பார்த்ததும் பிரமித்துஊமையாகிப்போனேன். தங்கள் அரண்மனைப் பெண்மணிகள் என்னுடன் சமிக்ஞை மூலமாகப் பேசினார்கள். அவர்கள் எல்லாரும் ஊமை என்று எண்ணி நானும் சமிக்ஞையாக மறுமொழி சொன்னேன். தங்களுடைய பேச்சைக் கேட்ட பிறகு எனக்கும் பேச்சு நினைவு வந்தது...''

''நீ பெரிய வாயாடி என்பதில் சந்தேகமில்லை. உன்னை எப்படித்தான் அந்த வைத்தியர் மகன் பிடித்துக் கொண்டு வந்தான் என்பதை நினைத்தால் ஆச்சரியமாக இருக்கிறது. அவன் முட்டாளாயிருந்தாலும் சாமர்த்தியசாலிதான்.''

''சுவாமி! அந்தப் பாவி மகன் என்னைப் பிடித்துக் கொண்டு வரவில்லை. அதற்குப் பிரயத்தனப் பட்டிருந்தால் இத்தனை நேரம் அவன் யமலோகத்துக்கு நிச்சயமாக யாத்திரை செய்து கொண்டிருப்பான்!'' என்று கூறிப் பூங்குழலி தன் இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

''பெண்ணே! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். கத்தியை இடுப்பிலே செருகிக்கொள். அவன் பேரில் உனக்கு ஏன் இத்தனை கோபம்? அவன் தான் உன்னைப் பிடித்து வரவில்லை என்றாயே...?''

''என்னை அவன் பிடித்துக் கொண்டு வரவில்லை. ஆனால் என்னை அவன் ஆட்கள் படகிலே சேர்த்துக் கட்டிப் போட்டு விட்டு வந்தார்கள். என் அண்ணியை மரத்திலே சேர்த்துக் கட்டி விட்டார்கள். இத்தனைக்கும் அந்தச் சண்டாளன் வைத்தியர் மகன் இதில் தனக்கு ஒரு சம்பந்தமுமில்லை யென்று என்னிடம் சொன்னான்...''

''அந்தவரையில் அவன் புத்திசாலிதான். நான் சொன்னபடியே அவன் நடந்து கொண்டிருக்கிறான்...''

''ஐயா, முதன் மந்திரியே! அந்தத் தூர்த்தனை அனுப்பியது தாங்கள்தானா? வாயில்லாப் பேதையாகிய என் அத்தையைப் பிடித்துக் கொண்டு வரக் கட்டளையிட்டதும் தாங்கள்தானா?''

''உன் அத்தையா? கரையர் மகள் மந்தாகினி உன் அத்தையா? அப்படியானால், நீ?... கலங்கரை விளக்கத்துக் காவலர் தியாக விடங்கருக்கு நீ என்ன வேணும்?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஐயா! அவருடைய அருமைப் புதல்வி நான்!''

''ஆகா! தியாக விடங்கருக்கு இவ்வளவு வாயாடியான ஒரு மகள் இருக்கிறாள் என்பது எனக்கு இதுவரை தெரியாமற் போயிற்று!''

''இதை வெளியில் சொல்ல வேண்டாம் ஐயா!''

''ஏன் பெண்ணே!''

''சோழ சாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி பிரம்மராயருக்குத் தெரியாத விஷயம் எதுவுமே இல்லை யென்று நாடெல்லாம் பிரசித்தமா யிருக்கிறது. தங்களுக்கு ஒன்று தெரியாது என்று ஏற்பட்டால் தங்களுக்கு மக்களிடம் உள்ள மதிப்புக்குப் பங்கம் வந்துவிடாதா?''

''பெண்ணே! என் மதிப்பைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. எனக்குத் தெரியாத இன்னொரு செய்தியை மட்டும் சொல்லிவிடு. உன் அத்தையைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள் என்றாயே? அவள் இப்போது எங்கே? நான் அனுப்பிய பல்லக்கில் நீ எப்படி ஏறிக் கொண்டாய்? எவ்விடத்தில் ஏறிக் கொண்டாய்?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஐயா! வாயில்லாத ஊமையாகிய என் அத்தையைத் தாங்கள் எதற்காகக் கைப்பற்றிக் கொண்டு வர ஆட்களை அனுப்பினீர்கள்?''

''மகளே! அதை உன்னிடம் சொல்வதற்கில்லை. அது பெரிய ராஜாங்க சம்பந்தமான விஷயம்.''

''தந்தையே! அப்படியானால், தாங்கள் கேட்ட கேள்விகளுக்கு நானும் மறுமொழி சொல்ல இயலாது.''

''சொல்லும்படி செய்வதற்கு வழிகள் இருக்கின்றன.''

''என்னிடம் பலிக்காது.''

''பெண்ணே! உன்னைப் பாதாளச் சிறைக்கூடத்துக்கு அனுப்புவேன்...''

''எந்தப் பாதாளச் சிறையிலும் என்னை அடைத்து வைத்திருக்க முடியாது.''

''பாதாளச் சிறைக்கு ஒரு முறை போனவர்கள் திரும்பி வருவதில்லை...''

''திரும்பி வந்த ஒருவனை எனக்குத் தெரியும் ஐயா! நேற்றுக் கூடச் சேந்தன்

# கீதைக் கதைகள்



'நீங்கள் சுவாமியைப் புத்தியால் ஏமாற்றப் பார்க்க, அவர் உங்களைத் தன் சக்தியால் ஏமாற்றி விட்டார் போலிருக்கிறது....'

## 8. வேறு

அவன் ஈசுவர தரிசனத்துக்காக ஆலயம் சென்றிருந்தான். அவனுடைய பட்டிக்காட்டு மனைவி வெளியே காத்திருந்தாள்.

வெகு நேரமாயிற்று. முகமெல்லாம் சிரிப்பாகப் பொலிய அவன் ஆலயத்திலிருந்து மீண்டான்.

'என்ன விசேடம், வெகு சிரிப்பு?' என்றாள் மனைவி.

'கடவுளைக் கண்ணாரக் கண்டால் ஆனந்தமாக இருக்காதா என்ன?' என்றான் கணவன்.

ஆவல் மீதூர, 'அவர் எப்படி இருந்தார்? என்ன கூறினார்?' எனக் கேட்டாள்.

'ஆயிரம் சூரியர்கள் ஒரே சமயம் உதித்தது போல அவர் ஜெகஜ்ஜோதியாகக் காட்சியளித்தார். திருவாய் திறந்து அருள் பேசினார். குமிண்நகையே அவராகி, என்னைப் பார்த்து, 'பக்தா! முதலில் உன் ஆணவத்தை உடை' என்றார். நான் தேங்காயை எடுத்துச் சிதற அடித்தேன்.'

'ம்.... அப்புறம்?'

''உன் உள்ளத்தை என் பாதங்களிலே அர்ப்பணிக்கவும்' என்றார். நான் இரு கைகள் நிறைய மலர்களை அள்ளி அவருடைய பாதங்களிலே சொரிந்தேன். 'ஞானச் சுடரில் நீ ஒன்றுதல் வேண்டும்' என்றார். நான் சூடத்தை ஏற்றிக் காட்டினேன். மறுகணம், என் கிரியைகளுக்கான விளக்கத்தைக் கேட்டார். நான், 'ஈசா! நீ அளித்துள்ள அறிவின் துணை பற்றி உருவகமாகச் சிந்திக்கவும், அவற்றைச் செயல்படுத்தவும் கற்றுக் கொண்டேன். என் ஆணவத்தை உடைத்ததற்கு அடையாளமாகத் தேங்காயை உடைத்தேன். என் இதயத்தை அர்ப்பணிக்கும் கிரியையாக மலர்களை வைத்தேன். ஈற்றில் தங்களுடைய பக்தியிலே தன்னையே அழித்துக் கொள்ளும் சூடத்தைக் காட்டினேன்....' என விளக்கினேன். ஈசன் மகிழ்ச்சியுடன் முறுவலித்தார். 'பக்தா! உன் சாமர்த்தியத்தை மெச்சினேன். நீ சென்று வா' என்றார்...' எனக் கணவன் நடந்தேறிய வர்த்தமானத்தைக் கூறி முடித்தான்.

'உங்களுடைய சாமர்த்தியத்தைச் சுவாமியே மெச்சினார் என்றால் பெரிய சாதனைதான்... அது சரி, என்ன வரம் பெற்றீர்கள்?'

'வந்து... வரமா? ஈசன் என்னைப் புத்திசாலியெனப் புகழ்ந்ததும் நான் மெய்மறந்து போனேன். வரம் கேட்கும் விஷயம் நினைவுக்கு வரவில்லை. அதற்கிடையில் ஈசன் மறைந்து விட்டார்...'

'நீங்கள் சுவாமியைப் புத்தியால் ஏமாற்றப் பார்க்க, அவர் உங்களைத் தன் சக்தியால் ஏமாற்றி விட்டார் போலிருக்கிறது' எனக் கூறிய பட்டிக்காட்டு மனைவி, மனம் சலுங்கினாள்.

— எஸ். பொன்னுத்துரை

---

அமுதனுடன் பேசிக் கொண்டுதான் பிரயாணம் செய்தேன்...''

''அவன் யார் சேந்தன் அமுதன்?''

''அவன் என்னுடைய இன்னொரு அத்தையின் மகன். அவனும் நானுமாகத்தான் கோடிக் கரையிலிருந்து வந்து கொண்டிருந்தோம்.''

''எதற்காக மகளே?''

''இந்தத் தஞ்சாவூரில் உள்ள மாட மாளிகை, கூட கோபுரங்களைப் பார்க்க வேண்டுமென்று வெகு காலமாக ஆசை உண்டு. சக்கரவர்த்தி சுந்தர சோழரைத் தரிசிக்க வேண்டுமென்றும் ஆவல் கொண்டிருந்தேன். சக்கரவர்த்திக்கு உடல் நலமில்லை என்று சொன்னார்களே இப்போது எப்படி இருக்கிறது, ஐயா? நான் பார்க்கலாமா?''

''அப்படியேதான் இருக்கிறது மகளே! அபிவிருத்தி ஒன்றுமில்லை. ஆகையால் சக்கரவர்த்தியைத் தரிசிக்கும் எண்ணத்தை மறந்துவிடு!...''

''அது எப்படி மறக்க முடியும் ஐயா! சக்கரவர்த்தியை நான் பார்த்தேயாக வேண்டும். பார்த்து, அவருடைய தர்ம ராஜ்யத்தில், பெண்களைப் பலவந்தமாகப் பற்றிக் கொண்டு வரும் அக்கிரமம் நடக்கும் செய்தியைச் சொல்ல வேண்டும்....''

''பெண்ணே! உன்னோடு வெறும் விவாதம் செய்து கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை. உன்னைப் பலவந்தமாகப் பற்றிக் கொண்டு வர நான் கட்டளையிடவும் இல்லை. நான் அனுப்பிய பல்லக்கில் நீ எப்படி ஏறிக் கொண்டாய்? அதைச் சொல்! யாராவது உன்னைப் பலவந்தமாகப் பிடித்துப் பல்லக்கில் ஏற்றினார்களா?''

''இல்லை, சுவாமி! அதுமட்டும் இல்லை. தஞ்சைக் கோட்டைக்கு அருகில் வரும் சமயத்தில் இந்தப் பல்லக்கு வெறுமையாக இருந்தது. மழையாயிருக்கிறதே என்று நானாகவேதான் பல்லக்கில் ஏறிக் கொண்டேன்....''

முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் தமது சீடனாகிய ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''ஒருவாறு எனக்கு

இப்போது விஷயம் விளங்குகிறது. வழியில் புயலும் மழையுமாக இருந்தபோது பல்லக்கை எங்கேயோ இறக்கி யிருக்கிறார்கள். அச்சமயம் இவள் அத்தையைப் பல்லக்கிலிருந்து இறக்கிவிட்டு இவள் ஏறிக் கொண்டிருக்கிறாள். வைத்தியர் மகன் பேரில் மரம் விழுந்து, பிரக்ஞை இழந்து விட்டபடியால் அவனால் இதைக் கவனிக்க முடியவில்லை. சிவிகை தூக்கிய மற்றவர்கள் கவனிக்கவில்லை. கோட்டை வாசலுக்குச் சமீபத்தில்தான் இது நடந்திருக்க வேண்டும். திருமலை! என்னுடைய ஊகம் சரியா யிருக்கும் என்று உனக்குத் தோன்றுகிறதா?'' என்று கேட்டார்.

''சுவாமி! தாங்கள் இப்போது யூகித்துச் சொன்னபடியேதான் நடந்தது. நானே கண்ணால் பார்த்தேன்.''

''நீ பார்த்தாயா? அது என்ன? இத்தனை நேரம் ஏன் வாயை மூடிக்கொண்டிருந்தாய்? சீக்கிரம் சொல்லு!''

''நேற்று முன்னிரவில் மழைக்கால இருட்டில் கோட்டை வாசலை நெருங்கி வந்து கொண்டிருந்தேன். பெரும் புயலும் மழையும் அடித்தன. மரங்கள் முறிந்து விழுந்தன. சாலை யோரத்து யாத்திரிகர் மண்டபம் ஒன்றில் சிறிது நேரம் தங்கி யிருக்கலாம் என்று சென்றேன். அங்கே நான் ஒதுங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் இந்தப் பெண்ணும் இன்னொரு வாலிபனும் வந்தார்கள். இவள் தன் அத்தை மகன் என்று சொன்னாளே, அவனாக இருக்கலாம்.. மின்னல் வெளிச்சத்தில் அவன் கழுத்தில் உருத்திராட்சம் கட்டி யிருப்பதைப் பார்த்தேன். பிஞ்சிலே பழுத்த சைவன் என்று தெரிந்து கொண்டு அவனிடம் வைஷ்ணவத்தின் பெருமையைச் சொல்லலாம், சற்றுப் பொழுது போகும் என்று எண்ணினேன். இதற்குள் அதே மண்டபத்தின் முகப்பில் ஒரு சிவிகையைக் கொண்டு வைத்தார்கள். சிவிகையின் திரையில் பழுவேட்டரையரின் பனைச் சின்னம் தெரிந்தது. சிவிகையிலிருந்து ஒரு பெண் இறங்கி இவர்கள் அருகில் வந்தாள். மண்டபத்துக்குள் இருள் ‘விந்த இடத்தில் மூன்று பேரும் ஏதோ ஜாடை மாடையாகப் பேசிக் கொண்டார்கள். பிறகு இவள் போய்ப் பல்லக்கில் ஏறுவதைப் பார்த்தேன். மின்னல் வெளிச்சத்தில் பல்லக்கிலிருந்து இறங்கியவள் வேறு; மறுபடியும் ஏறியவள் வேறு என்பதைத் தெரிந்து கொண்டேன். பல்லக்குத் தூக்கிகள் இதை யொன்றும் கவனிக்கவில்லை. மழை சிறிது நின்றதும், பல்லக்கைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டுப் போய் விட்டார்கள்....''

''ஆகா! அப்படியா என்னை ஏமாற்றி விட்டார்கள்? இத்தனை நேரம் சொல்லாமல் சும்மா இருந்தாயே? அந்த இரண்டு பேரும் பிறகு என்ன செய்தார்கள்?''

''பல்லக்குப் போனபிறகு அவர்களும் போய்விட்டார்கள். பின்னர் நானும் புறப்பட்டேன்...''

''திருமலை! நீ ஏன் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா யிருந்தாய்? இவள் அத்தையை நீ ஏன் தடுத்து நிறுத்தவில்லை? நீயும் இவர்களுடைய சூழ்ச்சியில் கலந்து விட்டாயா என்ன?''

''அபசாரம், குருதேவரே! அபசாரம். அத்தகைய துரோகத்தை நான் செய்யக்கூடியவனல்ல. முதலில், இதெல்லாம் தங்கள் ஏற்பாடு என்று எனக்குத் தெரியாது. பழுவூர் அரண்மனைப் பல்லக்கு ஆனபடியால், சின்னப் பழுவேட்டரையருடைய காரியமா யிருக்கலாம் என்று எண்ணினேன். மேலும் மந்தாகினி தேவியை என்னால் தடுத்து நிறுத்த முடியுமா? புயற் காற்றை அணை போட்டு நிறுத்தினாலும் நிறுத்தலாம்; அந்த மாதரசியை நிறுத்த முடியுமா? இலங்கையிலேயே முயன்று பார்த்துத் தோல்வி அடைந்தவன்தானே? மேலும் அந்த அம்மாளுக்கு என்னை அடையாளம் தெரியும். பார்த்ததும் மிரண்டு ஓடிப் போவார்கள். பிறகு யாராலும் அவரைப் பிடிக்க முடியாது....''

''அதை நினைத்தால் வைத்தியர் மகன் கெட்டிக்காரன் என்றே தோன்றுகிறது. இத்தனை தூரம் அழைத்துக் கொண்டு வந்து விட்டான் அல்லவா?''

''குருதேவரே! இந்த விஷயத்தில் தங்கள் ஊகம் சரியல்ல வென்று தோன்றுகிறது. மந்தாகினிதேவி தாமே விரும்பித்தான் வந்திருக்க வேண்டும். தஞ்சையை நெருங்கியதும் அவருடைய மனம் மாறியிருக்க வேண்டும்...''

''இருக்கலாம்; இருக்கலாம். ஆனாலும் இதற்குள் அதிக தூரம் அந்தக் கரையர் மகள் போயிருக்க முடியாது. இரவெல்லாம் காற்றும் மழையுமாக இருந்ததல்லவா? சமீபத்தில்தான் எங்காவது இருக்க வேண்டும்! திருமலை! எப்படியாவது அவளைப் பிடித்தாக வேண்டும். ஒருவேளை இந்தப் பெண்ணுக்கு அவள் தங்குமிடம் தெரிந்திருக்கலாம்...! மகளே! உன் பெயர் என்ன?''

''பூங்குழலி ஐயா!''

''ஆகா! அழகான பெயர்! பெயர் வைப்பதில் தியாக விடங்கரின் சாமர்த்தியத்துக்கு இணையே கிடையாது. பூங்குழலி! உன் அத்தை எங்கே தங்கியிருப்பாள் என்று உனக்குத் தெரிந்திருக்கும்.

தெரிந்தால் சொல்லு! அவனுக்கு ஒன்றும் கெடுதல் நேராது.''

பூங்குழலி சிறிது யோசித்துவிட்டு, ''சுவாமி! என் அத்தை இப்போது இருக்கக் கூடிய இடம் எனக்குத் தெரியும். அவளை எதற்காகத் தாங்கள் பிடித்து வரச் செய்தீர்கள் என்று சொன்னால், நானும் அவள் இருக்குமிடத்தைச் சொல்லலாம்...'' என்றாள்.

''பூங்குழலி! இது பெரிய இராஜாங்க விஷயம். அரண்மனையைப் பற்றிய இரகசியம். உன்னிடம் சொல்ல முடியாது.''

''நானும் சொல்ல முடியாது.''

''இந்தப் பெண்ணுடன் பேசிச் சாத்தியப்படாது...''

''ஐயா! ஒரு நிபந்தனையை நிறைவேற்றுவதா யிருந்தால்...''

''ஆகா! எனக்கு இந்தப் பெண் நிபந்தனை போடுகிறாளாம்! அது என்ன?''

''என் அத்தையைத் தஞ்சாவூர் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்து மணி மகுடம் சூட்டுவதா யிருந்தால், அவளை நானே அழைத்து வருகிறேன்.''

''திருமலை! இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது...!''

''அதை இப்போதுதானா கண்டீர்கள், குருதேவரே! இவளை ஒன்றும் கேட்கவே வேண்டாம். இவள் அத்தை இருக்குமிடம் எனக்குத் தெரியும். இவள் அத்தை மகன் சேந்தன் அமுதன், கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் பூந்தோட்டத்தில் இருக்கிறான். அவனும் அவனது அன்னையும் தளிக்குளத்தார் கோயிலுக்குப் புஷ்பக் கைங்கரியம் செய்கிறவர்கள். அங்கேதான் தாங்கள் தேடும் பெண்மணி இருக்கிறாள். என்னுடன் சில ஆட்களை அனுப்பினால் அழைத்து வருகிறேன்!'' என்றான் ஆழ்வார்க்கடியான். பூங்குழலி திருமலையை எரித்து விடுபவள் போலப் பார்த்து விட்டு, ''அப்படி ஏதாவது செய்தால் நான் இப்போதே சக்கரவர்த்தியின் அரண்மனை முன்னால் சென்று முறையிடுவேன்! நீங்கள் செய்யும் அக்கிரமம் ஊரெல்லாம் அறியும்படி செய்வேன்!'' என்றாள்.

''திருமலை! இவளைப் பாதாளச் சிறைக்கு அனுப்பி வைக்க வேண்டியதுதான்; வேறு வழியில்லை!'' என்றார் அநிருத்தப் பிரம்மராயர்.

''என் அருகில் யாராவது வந்தால் கொன்று விடுவேன்'' என்று பூங்குழலி மடியில் செருகி வைத்திருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

''ஐயா! இந்தப் பெண்ணைப் பாதாளச் சிறைக்கு அனுப்ப வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக இளைய பிராட்டி குந்தவை தேவியின் மாளிகைக்கு அனுப்பி வைக்கலாம். இளைய பிராட்டி இப்போது இங்கேதானே இருக்கிறார்? அவர் இந்தப் பெண்ணின் பைத்தியத்தைத் தெளிய வைப்பார்! இளைய பிராட்டிக்கு இந்தப் பெண்ணின் மூலமாக ஆக வேண்டிய காரியம் ஏதேனும் இருக்கலாம்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''எதனால் சொல்லுகிறாய்? இளைய பிராட்டிக்கு இந்தப் பெண்ணினால் என்ன காரியம் ஆக வேண்டியிருக்கப் போகிறது?...''

''குருதேவரே! உங்களுக்குத் தெரியாதா? நேற்று மாலை இங்கு அடித்த புயல் சோழ நாட்டுக் கரையோரமாக அதாஹதம் செய்து விட்டிருக்கிறதாம்! தங்கள் அரண்மனை வாசலில் நாலா புறமும் தூதுவர்கள் வந்து காத்திருக்கிறார்கள்...''

''ஆம், ஆம்; அவர்களையெல்லாம் நான் இப்போது பார்க்க வேண்டும். அதற்குள் இந்தப் பெண்ணிடம் பேச்சுக் கொடுத்ததில் வெகு நேரம் வீணாகி விட்டது. இவள் ஊமையாகவே பிறந்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும்...''

''கேள்வி முறையில்லாமல் கொடுமை செய்யலாம் அல்லவா?'' என்று முணுமுணுத்தாள் பூங்குழலி.

''நாகைப்பட்டினத்துக்குப் பெரிய ஆபத்து என்று கேள்விப் படுகிறேன். கடல் பொங்கி வந்து நகரையே மூழ்கடித்துவிட்டதாகச் சொல்கிறார்கள்.''

இந்த வார்த்தைகளைக் கேட்டு முதன் மந்திரி அநிருத்தர், பூங்குழலி இருவருமே திடுக்கிட்டார்கள்.

''...அதைப் பற்றித் தங்களிடம் விசாரிப்பதற்கு இளைய பிராட்டியே ஒருவேளை இங்கே வந்தாலும் வரக்கூடும்!'' என்று முடித்தான் ஆழ்வார்க்கடியான்.

அவன் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே அரண்மனை வாசலில் ஜய கோஷத் தொனிகள் கேட்டன.

''திருமலை! நீ எப்போது ஞான திருஷ்டி பெற்றாய்? இளைய பிராட்டிதான் வருகிறார் போலிருக்கிறது....'' என்று சொல்லிக் கொண்டு அநிருத்தர் எழுந்து வாசலை நோக்கி நடந்தார்.

அதற்குள் அதே வாசல் வழியாகக் குந்தவை தேவியும் வானதியும் உள்ளே பிரவேசித்தார்கள்.

பூங்குழலி அங்கே நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் இளைய பிராட்டியின் திருமுகத்தில் குடிகொண்டிருந்த கவலைக் குறி மறைந்து, வியப்பும் உவகையும் ஒருங்கே பிரதிபலித்தன.

(தொடரும்)

"**வா**னர வீரர்களே! உங்களுடைய சாமர்த்தியத்தைப் பற்றிச் சுக்ரீவன் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீங்கள் ஒவ்வொருவரும் தேஜஸும் வீரியமும் நிறைந்தவர்கள் என்பதில் சந்தேக மில்லை. இந்தக் காரியத்தை நாம் முடித்தே தீர வேண்டும். சீதையைக் காணுமல் நாம் ஒரு நாளும் கிஷ்கிந் தைக்குத் திரும்ப முடியாது. அரசனுல் அவமானத்தோடு கொல்லப்படுவதை விட இவ்விடமே நாமாக உயிர் நீப்பது நலம். ஆனபடியால், சொல்லுங்கள். ஒவ்வொருவராக, எவ்வளவு தூரம் தாண்டும் உறுதியும் நம்பிக்கையும் உங்க ளுக்கு இருக்கிறது?'' என்று கேட்டான் அங்கதன்.

**கஜ**ன், ''நான் பத்து யோசனை தூரம் தாண்டுவேன்'' என்று அடக்கத் துடன் சொன்னுன்.

கபாக்ஷன், ''நான் இருபது யோசனை தாண்டுவேன்!'' என்ருன்.

''நான் முப்பது யோசனை தாண்டு வேன்!'' என்ருன் மற்ருெரு வானரத் தலைவன்.

இவ்வாறே பலர் முன்வந்தார்கள். ஒருவர் மேல் ஒருவர் உயர்ந்து கொண்டே போனுர்கள். கடைசியாக எல்லோரையும்விட முதிய வீரனுன ஜாம்பவான் பேசலானுன்:

'' நான் விருத்தாப்பிய தசை அடைந்திருக்கிறேன். ஒரு காலத்தில் கொஞ்சம் பலம் எனக்கு இருந்தது. இப்போது அசக்தனுக இருக்கிறேன். ஆயினும் இது அரசன் கட்டளையிட்ட வேலை. ராம காரியமாகவும் இருக் கிறது. கிழ வயதிலும் ஏதாவது செய்ய லாம் என்று ஆசைப்படுகிறேன். தொண் ணூறு யோசனை தாண்டுவேன். அதற்கு மேல் முடியாது; லங்கை போய்ச் சேர இது போதாது போலிருக்கிறதே! என் வாலிபப் பருவத்தை நினைத்து இப் போது கிழவனுகி விட்டேனே என்று வருத்தமாக இருக்கிறது'' என்ருன்.

இதைக் கேட்ட யுவராஜன், ''நான் நூறு யோசனையும் தாண்டி இலங்கை போய்ச் சேருவேன். சந்தேகமில்லை. ஆனல் அவ்விடத்திலிருந்து திரும்பி வர அவ்வளவு தூரம் மறுபடியும் தாண்டும் சக்தி எனக்கு இருக்குமோ இருக் காதோ சொல்ல முடியாது'' என்ருன்.

ஜாம்பவான் சொன்னுன்: ''அரச குமாரா! அதைப் பற்றி நீ சந்தேகப் பட வேண்டியதில்லை. வாலிக்கு இருந் ததுபோலவே உனக்கும் அளவற்ற சக்தி உண்டு. ஆயினும் இந்தக் காரியத்தை அரசனுகிய நீ வகித்தல் சரியாகாது. மற்றவர்களைக் கொண்டு அரசன் வேலை வாங்க வேண்டும். தானே நேரில் காரியங்களைச் செய்யப் போவது ராஜ நீதியாகாது. அபாயமாகும். பிரஜை களைக் காத்து ஆள வேண்டியவன் பின் னல் நிற்க வேண்டும். அபாய காரியங் களில் தானே நேரில் பிரவேசிக்கக் கூடாது. நான் சொல்லும் யோசனை என்னவென்ருல், அதோ தூரத்தில் மௌனமாக உட்கார்ந்திருக்கிருனே, வாயு குமாரன், அவன்தான் இக்காரி யத்தைச் செய்து முடிக்கும் திறமையும் சக்தியும் பெற்றவன்.'' இவ்வாறு சொல்லிவிட்டு ஜாம்பவான் ஹனுமா னிடம் அவனை அழைத்து வந்தான்.

துயரத்தில் மூழ்கி நின்ற லக்ஷக்கணக் கான வானரர்களுக்கெதிரில்ஜாம்பவான் ஹனுமானைப் பார்த்துச் சொன்னுன்:

''வீரனே, எல்லா சாஸ்திரங்களையும் அறிந்த சிரேஷ்டனே. தனியாக ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கிருய்? அரச னுன சுக்ரீவனுக்குச் சமமல்லவோ நீ? தேஜஸிலும் பலத்திலும் நீ நம் அனை வரையும் தோற்கடிப்பாயல்லவா? ராம லக்ஷ்மணர்களுக்கும்கூட நீ சமமான வன் அல்லவோ? பட்சி சிரேஷ்டனுன கருடன் கடலைத் தாண்டிப் பறப்பதை நான் பார்த்திருக்கிறேன். வினதையின் குமாரன் கருடனுடைய சிறகுகளின் பெரும் பலம் உன் தோள்களுக்கும் உண்டு. பராக்கிரமத்திலும் வேகத்தி லும் கருடனுக்கு நீ குறைந்தவனல்ல; உன்னுடைய பலமும் புத்தியும் உனக் குத் தெரியவில்லை. உலகத்தில் உனக்குச் சமம் யாரும் இல்லை' உன் தாயார் அஞ்சனை தேவலோகத்து அப்ஸரஸ்; ரிஷியின் சாபத்தால் வானரமாகப் பிறந்தாள். அவள் மலைச் சாரலில் உல்லாசமாகத் திரிந்து கொண்டிருந்த போது ஒரு நாள் வாயுதேவன் அவள் அழகைக் கண்டு காம பரவசமாகிப் போய் அடக்கம் இழந்து அவளைத் தழுவி னுன். தருமத்துக்குப் பயந்த அவள் 'யார் பதிவிரதையாகிய என்னை, அவமானப்படுத்துவது? துஷ்டனே!' என்று கோபம் கொண்டு கேட்க, வாயு தேவன் சொன்னுன்: 'கோபிக்க வேண்டாம்! உன் தேகம் மாசுபட வில்லை. ஆசையால் தூண்டப்பட்டு நான் இந்தக் காரியம் செய்துவிட்டேன். தூர நிற்கிறேன். மனத்தாலேதான் நான் உன்னை ஆலிங்கனம் செய்தது. உன் உடல் என்னுல் தீண்டப்படவில்லை. ஆயினும் என் மானஸ ஸ்பரிசத்தால் உனக்கு உண்டாகும் மகன் எனக்குச் சமமான வீர்யமும் பலமும் பெற்றவனு யிருப்பான். நிகரற்ற பராக்கிரமமும் புத்தியும்கொண்ட வானரன் ஆவான்.' இவ்வாறு வாயு பகவான் வினய

மாகச் சொல்லி அஞ்சனையைச் சமாதானப்படுத்தினான்.

"ஹனுமானே! நீ சிறு குழந்தையாக இருக்கும் போதே ஆகாயத்தில் கிளம்பிக் கிழக்கில் உதித்த சூரியனை ஒரு பழம் என்று எண்ணி அதைப் பிடிக்கச் சென்றாய். நீ கிளம்பித் தடையின்றிப் பயமின்றிச் செல்வதைப் பார்த்துத் தேவராஜன் கவலை கொண்டவனாய், 'இவன் யார்? சூரியனையே பிடிக்கப் போகிறான்?' என்று வஜ்ராயுதத்தை உன் பேரில் வீசினான். இடியால் அடிபட்டு நீ விழுந்தாய். மலையின் மேல் விழுந்தபடியால் உன் வலது கன்னம் உடைந்தது. உன் தந்தை வாயுபகவான் உனக்கு நேரிட்டதைக் கண்டு பெருங் கோபம் கொண்டு தன் சலனத்தை நிறுத்தி விட்டான்; அதன் பயனாக ஜீவகோடிகள் அனைத்தும் பிராண ஸ்தம்பம் அடைந்து வருத்தப்பட்டுத் தத்தளித்தன. தேவர்கள் வாயு பகவானைக் கோபம் தணிய வேண்டிக் கொண்டு இறைஞ்சினார்கள். பிரம்மனும் இந்திரனும் அச்சமயம் உனக்கு வரம் தந்தார்கள்: 'உனக்கு எந்த ஆயுதத்தாலும் அழிவில்லை. நீ இஷ்டப்பட்ட போது உன் மரணம் வரும். அதுவரையில் இல்லை' என்று வரம் பெற்றுச் சிரஞ்சீவியானாய். அஞ்சனை வயிற்றில் நீ வாயுபகவானுடைய மானஸ புத்திரனாகப் பிறந்தவன். வாயு பகவானுக்குச் சமமான தேஜஸும் புத்தியும் பராக்கிரமமும் பலமும் பெற்றிருக்கிறாய். இந்தப் பலத்தை நீ மற்ற துஷ்டர்களைப் போல் துர்விநியோகம் செய்யாமல் அடக்கமாக இருக்கிறாய். ராம காரியத்தை முடித்துத் தரக்கூடியவன் நீயே. சமுத்திரத்தைத் தாண்டுவது உனக்கு ஒரு கஷ்டமல்ல. பெருந்துயரக் கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கும் இந்த வானரப் படையை நீ காப்பாற்ற வேண்டும். கடலைத் தாண்டும் சக்தியைப் பெற்றிருக்கும் நீ சும்மா இருக்கலாகாது. உன் வடிவம் பெருகுக. கருடனுக்கு நிகரானவன் நீ. நானும் ஒரு காலத்தில் பலம் பெற்றிருந்தேன். இந்தப் பூமண்டலத்தை இருபத்தொரு தடவை சுற்றி வந்திருக்கிறேன். பாற்கடலைக் கடைந்த காலத்தில் தேவர்கள் சொன்னபடி நான் நான்கு திசைகளிலிருந்தும் ஔஷதிகளைக் கொண்டு வந்து கடலில் சேர்த்தேன். ஆனால் இப்போது நான் விருத்தாப்பியம் அடைந்துவிட்டேன். நீதான் வானரர்களுக்கு இப்போது கதி. ஆஞ்சனேயா! உன்னைச் சரணம் அடைந்தோம். தெய்விக சக்தியைப் பிதுரார்ஜிதமாகப் பெற்றிருக்கும் உத்தமனே! இனித் தாமதிக்க வேண்டாம். உன்னுடைய உண்மைப் பலத்தை அறிந்து கொண்டு கிளம்புவாய். திரிவிக்கிரமனைப் போல் ஒரே தாவுத் தாவி இந்தச் சமுத்திரத்தைத் தாண்டுவாய். நம்முடைய துயரத்தைத் தீர்ப்பாய்."

இவ்வாறு விருத்தனான ஜாம்பவான் ஹனுமானைத் துதித்து, அவனுக்குள்ள பலத்தை அவனுக்கு எடுத்துக்காட்டி, தூங்கி நின்ற பராக்கிரமத்தை எழுப்பினான்.

உடனே பருவ காலத்துச் சமுத்திரம் போல் ஹனுமானுடைய வடிவம் வளர ஆரம்பித்தது. வானரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே வாயு புத்திரன் வளர்ந்து வளர்ந்து தேகமும் தேஜஸும் விருத்தியாகித் திரிவிக்கிரமனைப் போல் நின்றான். அவன் உடலினின்று வீசிய சுடரொளியைக் கண்டு அங்கதனும் மற்ற வானரர்களும் வியந்து ஆனந்த பரவசமானார்கள்.

இனி, ராமாயணத்தில் ஹனுமானே கதாநாயகன். விஷ்ணு பக்தர்கள் அவனைச் 'சிறிய திருவடி' என்று பெயரிட்டு அன்போடு சொல்வார்கள். பெரிய திருவடி கருடன். கருடன் எப்போதும் பெருமாளிடமே இருப்பதால் அவனுக்கு அந்தப் பெயர். இளைய திருவடி பிராட்டியின் துக்கத்தைத் தீர்த்து, ராவணனுடைய நகரத்தைக் கொளுத்தி அழித்துத் தன் நாதனிடம் சென்று 'கண்டேன் சீதையை' என்று தெரிவித்த வரலாறு இனி சொல்லப்படும். (தொடரும்)

---



## ஆபத்து! ஆபத்து!

ஒரு தனி நபரிடம் தரப்பட்டிருக்கும் அதிகாரம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ, அந்த அளவுக்கு அவரால் அவருடைய நாட்டுக்கு ஏற்படக்கூடிய ஆபத்தும் அதிகமாகி விடுகிறது.

— எட்மண்ட் பர்க்

## இதுவும் அதுவும்

நாம் இன்று செய்யவேண்டிய காரியங்கள் இரண்டுதான். ஒன்று, பணக்காரர்கள் எப்படி உழைக்கிறார்கள் என்பதை ஏழைகள் அறியச் செய்ய வேண்டும்; மற்றொன்று, ஏழைகள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைப் பணக்காரர்கள் அறியச் செய்ய வேண்டும்.

— மன் அக்கீசன் - க.ரு.நா.

# அஞ்சாத எஞ்சின் டிரைவர்

ரயில் விபத்துக்கள் பலவற்றைப் பற்றிப் பத்திரிகைகளில் படித்துவிட்டு மனம் பதைக்கிறோம். அஜாக்கிரதையாக இருந்து இப்படி உயிர்ச் சேதம் நிகழக் காரணமாயிருந்துவிட்டார்களே என்று கோபப்படுகிறோம். ஆனால் சர்வ ஜாக்கிரதையாகவும் சமயோசிதமாகவும் நடந்து கொண்டு எஞ்சின் டிரைவர்களும் பிறரும் எத்தனை சந்தர்ப்பங்களில் பயங்கரமான விபத்துக்களைத் தவிர்த்து உயிர்களைக் காத்திருக்கிறார்கள் என்று நாம் அதிகமாக எண்ணிப் பார்ப்பதில்லை. அந்தக் குறையை இதோ நிவர்த்தி செய்து விடுவோமே!

''1967ம் ஆண்டு மே மாதம் தென்னிந்திய ரயில்வே பத்திரிகை ஒன்றில் பாராட்டப் பெற்ற திரு ஆர். ரத்னசாமி என்பவர் தாங்கள்தானே?''

''ஆமாம், நான்தான். லாரி விபத்து ஒன்றைத் தவிர்த்ததற்காக என்னைப் பாராட்டி ரயில்வே சூபரின்டென்ட் திரு சி. வி. பி. மேனன் அவர்கள் ரூபாய் ஐம்பது வெகுமதி அளித்தார்.''

''அப்படியென்ன அது பெரிய ஆக்ஸிடென்டா?'' என ஆவலுடன், உடனே அவரைச் சொல்ல வைப்பதற்காக எஞ்சின் டிரைவருக்கு நான் 'சாவி' கொடுத்தேன்.

''என்னுடைய இருபத்துமூன்று வருட டிரைவர் சர்வீஸில் இந்தச் சம்பவம் மிகவும் பயங்கரமானதும், மறக்க முடியாததுமாகும்.

''நான் ராமேசுவரம் — கோயமுத்தூர் எக்ஸ்பிரஸில் வேலை செய்து கொண்டிருந்தேன். ரயில் மதுரைக்குச் சற்றுத் தொலைவுள்ள சமயநல்லூருக்கும் சோழவந்தானுக்கும் இடையில் சென்று கொண்டிருந்தது. இரவு பத்து மணி இருக்கும்; நல்ல வேகம்; நேரான பாதையும்கூட. நானும் பாதையைக் கவனித்தே வந்து கொண்டிருந்தேன். திடீரென்று தூரத்தில் ஏதோ தண்டவாளத்தை மறைப்பதைப் போல் தெரிந்தது. சற்று உற்றுப் பார்த்தேன்! லாரி ஒன்று தண்டவாளத்தைத் தாண்டாமல் சரியாகப் பாதையில் நின்று கொண்டிருந்தது. எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. 'விசில்' கொடுத்துப் பார்த்தேன். லாரி கொஞ்சம்கூட நகரவில்லை. ரயில் சென்று கொண்டிருக்கும் வேகத்தில் உடனே பிரேக் பிடித்தால் இணைப்புகள் ஒன்றைவிட்டு ஒன்று விலகிவிடும். ரயில் சாயவோ தடம் புரளவோ செய்யும். லாரிக்கும் எஞ்சினுக்கும் உள்ள தூரம் மிகவும் குறுகிவிட்டது. நானும் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரேக்கைப் பிடித்தேன். எனக்கு நம்பிக்கையே இல்லை. இப்பொழுது எஞ்சினுக்கும் லாரிக்கும் உள்ள தூரம் மிக மிகச் சொற்பமே! ரயிலின் வேகம் ஓரளவு குறைந்து விட்டது; என்றாலும் லாரிக்கு முன்னாலேயே ரயில் நின்றுவிடும் என்ற நம்பிக்கையை நான் முற்றிலும் இழந்து விட்டேன். ஆனால் எப்படியோ ரயில் நின்றது. லாரிக்கும் எஞ்சினுக்கும் உள்ள தூரம் பதினைந்தே அடிதான்! அன்று அந்த லாரி தப்பியது இறைவனின் கருணையினால் தான்'' என்று எக்ஸ்பிரஸ் வேகத்தில் கூறி முடித்தார் எக்ஸ்பிரஸ் டிரைவர்.

குத்துக் கல்லாகக் கேட்டுக் கொண்டிருந்த நான், அவர் கூறி முடித்ததும் அப்பொழுதுதான் தூண்டிவிட்ட குத்து விளக்கானேன்.

''லாரியை அதன் பிறகு எப்படி அகற்றினீர்கள்?''

''மிக வேகமாக வந்த ரயில் விசில் சத்தம் போட்டுப் பின் இப்படி நள்ளிரவில், நடுக் காட்டில் திடீரென்று நின்றவுடன் ரயில் பெட்டியில் இருந்தவர்கள் எல்லாம் கீழே இறங்கி எஞ்சின் சமீபம் வந்தார்கள். பிரயாணிகளுக்கு விஷயம் புரிந்து விட்டது. எனக்கு எப்படி யெல்லாமோ நன்றி தெரிவித்தார்கள்; சில பிரயாணிகள் லாரியை நெருங்கி அதற்குள்ளிருந்த டிரைவரைத் திட்டினார்கள்.''

''லாரியில் டிரைவர் இருந்தும் ஏன் நடு ரோட்டில் லாரியை நிற்க வைத்தார்?'' என்று கேட்டேன் நான்.

''தூரத்தில் ரயில் வருவதைப் பார்த்தவுடன (லாரி) டிரைவர் லாரியை விரைவாகச் செலுத்தியிருக்கிறார். 'லெவல் கிராஸிங்'கைத்







''தெருவில் விளையாடிக்கிட்டிருந்த பசங்க, வேடிக்கையா சில செங்கற்களைப் பொறுக்கி ஒரு வீடு கட்டியிருக்க. இப்போ என்னடான்னு, அதுக்கு 250 ரூபாய் வாடகை கேக்கறாங்க!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தாண்டும் பொழுது லாரி நின்று விட்டது. மேலும் லாரி நின்ற இடத்தில் ஒரு பள்ளமும் இருந்திருக்கிறது. லாரி டிரைவர் எவ்வளவோ சிரமப்பட்டிருக்கிறார். லாரி நின்றது நின்றது தான். கிளம்பவே இல்லை. அவசரத்தில் ஒன்றும் செய்வதறியாது, இருந்திருக்கிறார் டிரைவர். அதற்குள் நாங்கள் நெருங்கிவிட்டோம்'' என்றார் எஞ்சின் டிரைவர்.

இரவு நேரம். லாரி ரயில் பாதையில் இருக்கிறது. லாரியை அகற்றுவதே பெரும் பிரச்னையாகி விட்டதாம் ! காரணம்—லாரி நிறைய ஜல்லிக் கற்கள் பாரமாக நிறைந்திருந்தன. பள்ளத்திலுள்ள லாரியைப் பாரத்துடன் தள்ளுவது என்பது இயலாத காரியம். எனவே, எஞ்சின் டிரைவர் கூறிய படி முதலில் லாரியிலிருந்த கற்களை வெளியேற்றி, பிறகே லாரியைத் தண்டவாளத்தை விட்டுக் கீழே இறக்கியிருக்கிறார்கள்.

இதனால் சுமார் ஒரு மணி நேரம் தாமதமாயிற்று. இந்தக் கோவை எக்ஸ்பிரஸில் வந்த பிரயாணிகள் கோவையில் வேறு ரயில்களில் மாற வேண்டியிருக்குமல்லவா ? இதனைக் கருத்திற்கொண்டு டிரைவர் மிகவும் வேகத்துடன் சென்று மற்ற ரயில்களை, இவர் வண்டியில் வந்த பிரயாணிகள் பிடிப்பதற்கு ஏதுவாகத் தாமதமின்றிக் கோயமுத்தூர் சென்று விட்டாராம் !

இன்னொரு அநுபவம் :

''சென்னை—திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் சென்று கொண்டிருந்தேன். ரயில் மதுரையை விட்டுத் தாண்டி விட்டது. பகல் நேரம் தண்டவாளத்தின் ஊடே பெரிய பால் லாரி ஒன்று நின்றிருந்தது. தூரத்திலிருந்தே 'லெவல் கிராஸிங்'கில் லாரி நிற்பதைப் பார்த்து விட்டேன். விசில் சத்தத்தால் பலன் ஏற்படவில்லை, ரயில் செல்லும் வேகத்தில் உடனே பிரேக் பிடிக்க முடியாத சூழ்நிலை. எஞ்சின் லாரியை நெருங்கி விட்டது. பிரேக் பிடித்தேன்; மிகவும் நெருங்கி விட்டது. ஓர் அடி இருந்தது; பிறகு நாலிமை! 'டமார்' என்ற ஒரே சத்தம்! எஞ்சின் பால் லாரியில் மோதி நின்று விட்டது; லாரி லயனை விட்டுக் கீழே இறங்கியது.'' — பேச்சுக்குப் 'பிரேக்' போட்டார் எஞ்சின் டிரைவர்.

எஞ்சின் லாரியில் மோதியதால், லாரியின் பின்புறம் இலேசாகச் சேதமடைந்து விட்டது. எஞ்சினின் ஒரு பக்க இறக்கையும் பாதிக்கப் பட்டு விட்டது. எனினும் என்னவொரு விந்தையென்றால் தண்டவாளத்தின் நடுவே இருந்த பால் லாரி எஞ்சினில் மோதியதும், தூக்கி வைத்தது போல் அலுங்காமல் குலுங்காமல் அப்படியே ரோட்டுக்கு வந்துவிட்டது; மேலும் பால் லாரிக்குள் இருந்த சுமார் ஆயிரம் பால் பாட்டில்களில் ஒரு பாட்டில்கூட உடையவில்லை; ஒரு சொட்டுப் பால்கூட விரயமாகவில்லையாம்! ஆச்சரியந்தான் !

எஞ்சின் கிளீனராகப் பதினைந்து ரூபாய் சம்பளத்திலிருந்து, பின்பு படிப்படியாக உயர்ந்து, இறுதியில் 1946ல் டிரைவரான ரத்னசாமி அவர்கள் தற்பொழுது முதல்தர டிரைவராக (ஏ கிரேட்) எக்ஸ்பிரஸ் சூப்பர் மெயில் ஆகிய ரயில்களில் மட்டுமே பணியாற்றி வருகிறார்.

''உங்களுக்குப் பிடிக்காதது....?''

'' தனிப்பட்ட குடும்பத் தகராறுக்குத் தீர்வு காணச் சிலர் தற்கொலை செய்துகொள்ள ரயில் முன் விழ வருகிறார்கள். சமீப காலமாக மாணவர்கள் ஏதாவது போராட்டமென்றால் உடனே ரயிலைத்தான் நிறுத்துகிறார்கள். இவைதாம் எனக்குப் பிடிக்காதவை.''

''நீங்கள் சென்று வந்த ரயிலில் இதுவரை தற்கொலை நிகழ்ந்ததுண்டா ?''

''ஒரே ஒரு முறை எதிர்பாராதவிதமாக நடந்து விட்டது. குன்டூர் - கினிக்களூருக்கு இடையே ரயில் சென்று கொண்டிருந்தது. இரவு நேரம். அந்த இடம் மிகவும் வளைவான பகுதி. எஞ்சின் விளக்கு ஒளி நேராகத்தான் தெரியும். ரயில் நேரான பாதையில் செல்லும்பொழுது அந்த வளைவான பகுதி இருட்டாக இருக்கும். நேரான பாதை முடிந்து வளைவு திரும்பியவுடன் வெளிச்சம் தெரிந்தது. ஆனால் அங்கே தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்று வந்திருந்த ஓர் இளைஞர், மறைந்திருந்து திடீரென்று ரயில் முன் விழுந்து இறந்து விட்டார். இச்சமயங்களில் எப்படித்தான் பிரேக் பிடித்தாலும் சில மீட்டர் தூரம் தள்ளித்தான் ரயில் நிற்கும்.''

ஒரு முறை கல்பட்டி சத்திரம் — தங்கம்மா பட்டிக்கிடையே இவர் சென்று கொண்டிருந்த பொழுது எஞ்சினில் 'டிரைவிங் ஆக்ஸில்' உடைந்து, எஞ்சின் இழுக்கக்கூடிய சக்தியை இழந்து விட்டது. உடனே டிரைவர் எஞ்சினின் ஒரு பக்கமுள்ள பாகத்தைச் சரி செய்து எஞ்சின் மட்டும் ஓடுவதற்கு வகை செய்து விட்டார். எஞ்சினை ரயில் பெட்டிகளிலிருந்து கழற்றித் தனியே ஓட்டிச் சென்று உரிய இடத்தில் கொண்டு வந்து நிறுத்தி விட்டு, பிறகு வேறு எஞ்சினை ரயில் பெட்டிகளுடன் இணைத்துப் பயணத்தைத் தொடர்ந்திருக்கிறார்.

''யாதொரு விபத்துமின்றி, பொதுமக்களுக்கு உதவி புரிந்து ஓய்வு பெற வேண்டும்; இது என்னுடைய பிரார்த்தனையாகும்'' என்றார், தற்பொழுது கைநிறைய (கைநிறைய - சுமார் ஆயிரம் ரூபாய்)ச் சம்பளம் வாங்கும் டிரைவர் ரத்னசாமி.

''போய் வருகிறேன்'' என்றார் அவர்.

கழற்றி விடப்பட்ட எஞ்சினாக நானும் விடைபெற்றேன்.

பேட்டி: **மதுரை தங்கம்**





# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி



தமிழாக்கம்: ராஜாஜி

### 45

ஈசுவரன் நம்மைப் போன்ற ஒரு வியக்தி அல்ல. தனி மனிதனுக்குள்ள வரம்புகள் அவனுக்கு இல்லை. பகவான் ஒரு மனிதனாக அவதரித்தான் என்று நாம் சொல்லும்போது அதன் கருத்து என்னவென்றால் அந்த மனிதன் தெய்விக நிலைக்கும் பண்புக்கும் நெருங்கியவன் என்பதே.

கடவுள் எங்கும் நிறைந்த பொருள். ஒவ்வொரு மனிதனுடைய இதயத்திலும் பகவான் கோயில் கொண்டிருக்கிறான். ஆனபடியால் நாம் அனைவருமே அவனுடைய அவ்தாரங்கள் என்று வைத்துக் கொள்ளலாம். இது உண்மையாயினும் ராமன், ஸ்ரீ கிருஷ்ணன் இவர்களுக்கும் நமக்கும் ரொம்ப வித்தியாசம். ராமனும் கண்ணனும் பகவத் அவதாரம் என்றால் அவர்கள் நம்மைப் போன்றவர்கள் அல்ல; தெய்விக குணங்கள் கொண்டவர்கள் என்பது பொருள். சரித்திர உண்மையாக ராமனும் கண்ணனும் பிறந்து வாழ்ந்தார்களா அல்லது மக்களுடைய வெறும் கற்பனையா என்கிற கேள்வியைப் பற்றி நாம் ஆராய்ந்து குழப்பம் உண்டாக்கிக் கொள்ள வேண்டியதில்லை. மக்கள் ராமன், கண்ணன் என்று தெய்விக குணங்களை ஏற்றித் தோற்றுவித்துக் கொண்டிருக்கும் கற்பனைச் சிருஷ்டிகள் ஆயினும் அதுவே போதும்.

பிரபஞ்சத்திலுள்ள சக்தியெல்லாம் கடவுளே. உயிருக்கெல்லாம் உயிரும் அவனே! சுத்த சித்த சொரூபமான அவனுக்கு முதலுமில்லை, முடிவும் இல்லை. ஆயினும் எங்குமுள்ள அவனை நாம் கண்களால் காண முடியவில்லை. கண்டு பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை. மின்சாரம் பெரும் சக்தி அல்லவா? ஆனாலும் முறைப்படி அதை நாம் தோற்றுவித்த பிறகு அதன் பயனை அடைய முடியும். மின்சாரத்தின் லட்சணங்களை அறிந்து அந்த அறிவைக் கொண்டு எந்திரங்களை அமைத்து முயன்றால் தான் மின்சாரத்தின் பயனை நாம் அடைய முடியும். அவ்வாறே பராசக்தியான ஆண்டவனின் விதிகளுக்கு அடங்கி முயன்றால்தான் நமக்குள்ளும் நம்மோடும் இருக்கும் ஆண்டவனைக் காணலாம். (ஹரிஜன் 22-6-47)

ஹிந்து தர்மமானது ஒரு வரம்பற்ற கடலைப் போன்றது. ரத்தினாகரம், மதிப்பிட முடியாத மணிகளை அதில் காணலாம். எவ்வளவு ஆழம் மூழ்குகிறோமோ அவ்வளவுக்கு அதில் மணிகளைக் கண்டெடுக்கலாம். ஹிந்து சாஸ்திரத்தில் கடவுளுக்கு அநேகம் பெயர்கள் உண்டு. ஸ்ரீ ராமனும், கிருஷ்ண பகவானும் அவதரித்து, இந்த நாட்டில் வசித்து வந்தார்கள் என்று பல்லாயிர மக்கள் நம்பி வருகிறார்கள். அவர்களைத் தியானித்து முக்தியடையலாம் என்பது அவர்களுடைய உறுதியான நம்பிக்கை. உண்மையும் புராணமும் கற்பனையும் பிரிக்க முடியாத கதம்பமாகப் போயிருக்கின்றன. அவற்றை ஆராய்ந்து பொறுக்கி எடுக்க முடியாது. என்னைப் பொறுத்தமட்டில் எல்லா நாமங்களும், எல்லா வடிவங்களும் எங்குமுள்ள வடிவமற்ற ஒருராமனுடைய இலக்ஷணங்களாகவே வைத்துக்கொண்டிருக்கிறேன். என்னைப் பொறுத்தமட்டில் தசரதனுடைய குமாரன் சீதையின் நாயகன் என்று சொல்லப்படும் ராமன் எங்கும் பரந்து நிற்கும் ஈசனுடைய உருவமே. அவனுடைய நாமத்தை நம் உள்ளத்தில் எழுதிக்கொண்டோமானால் நம்முடைய கஷ்டங்கள் அனைத்தும், துயரங்கள் அனைத்தும், பாபங்கள் அனைத்தும் தீரும். (ஹரிஜன் 2-6-46)

உங்களுக்கு ஜலதோஷம் வரும்போலிருந்தால்
ரபெக்ஸ் பாதுகாப்பளிக்கும்

# ரபெக்ஸ்

## ஜலதோஷத்திற்கு தீவிரமாகச் செயல்புரியும், எரிச்சலற்ற நிவாரணி

குளிரும், ஈரமும் நிறைந்த சீதோஷ்ண நிலையில் பாதுகாப்பளிக்கிறது. உங்களுக்கு ஜலதோஷம் உள்ளபோது மார்பில் அடைசலை அகற்றி, மூக்கடைப்பைப் போக்கி இதமான நிவாரணமளிக்கிறது.

- 65 கிராம் மற்றும் 20 கிராம் ஜாடிகளிலும், 6 கிராம் டின்களிலும் கிடைக்கிறது.

ரபெக்ஸ் எப்பொழுதும் கைவசம் இருக்கட்டும்.




அலெம்பிக்கின்
ஹோம்பிரோ
பிரிவின் தயாரிப்பு



ஜலதோஷத்திலிருந்து
நிவாரணமளிக்கிறது
ரபெக்ஸ்

everest/968i/ACW tm

# பழைமையில் திளைத்துப் புதுமையைப் போற்றியவர்!

அ. ச. ஞானசம்பந்தன்

அற்றைநாள் புலவர்கள் பலர் வடமொழி, தென் மொழி என்ற இரண்டையும் கற்றிருப்பினும் தமிழ் மொழியைப் பொறுத்தமட்டில் கம்பனுக்குப் பிறகு கவிதைக் கலை மாண்டு விட்டது என்றே கருதினார்கள். இன்னும் சிலர் குமர குருபரர், சிவப்பிரகாசர் வரையில் வந்த புலமை, இவ்விருவரின் பின்னர் வறண்டு விட்டது என்று பேசினார்கள்.

இப் புலவர் பெருமக்களுடன் ஓரளவு நெருங்கிப் பழகிய காரணத்தால், இப் புலவர்களுள் ஒருவராக விளங்கிய இராகவய்யங்கார் ஸ்வாமி அவர்களிடமிருந்த தனித்தன்மையை இக்கட்டுரையாளன் அறிய முடிந்தது. அன்றியும் இப்புலவர் பெருமக்கள் அனைவருடைய திருவடியின் கீழ் அமர்ந்து தமிழ் கற்க வாய்ப்பு இருந்தமையால் இப் பெருமக்களின் உள்ளப் பாங்கினையும் கருத்து ஓட்டத்தினையும் ஒருவாறு அறிய உதவிற்று. இப்பெரும் புலவர்களுள் ஒருசிலர் இலக்கணத்தையே பெரிதென மதித்து, இலக்கணத்தைக் காட்டிலும் இலக்கியம் ஒரு படி தாழ்ந்தது என்று கருதினர். வேறு சிலர் இலக்கியமே ஒரு படி உயர்ந்தது என்று கருதினர். ஆனால், ஒன்று மட்டும் உண்மை. இவ்விரண்டு கட்சிகளைச் சேர்ந்தவர்களும் மற்றொரு கட்சியைச் சேர்ந்த நூல்களை நன்கு கற்றிருந்தார்கள். இற்றை நாளில் பேசும் ஒருசில புலவர்களைப் போல இலக்கணமே அறியாமல் அதில் என்ன இருக்கிறது என்று கேட்கும் தன்மையுடையவர்கள் அல்லர் இம்முன்னோர்கள்.

இத்தகைய கூட்டத்தில் திரு ரா. ரா. அவர்கள் தனித் தன்மையோடு விளங்கினார்கள். இரண்டு சிறந்த பண்புகள், ஏனைய புலவர்களிலிருந்து இவரைப் பிரித்து எடுத்துக் காட்டின. முதலாவது பண்பு, 19–20ம் நூற்றாண்டுக் கவிதைகளைக் கூட உள்ளன்போடு படித்து, ரசித்து, அவற்றிலும் ஒருசில கவிதைகளில் உயிரோட்டம் உண்டு என்பதை நம்பி, பிறர் அறியத் துணிவோடு எடுத்துக் காட்டியதாகும். இரண்டாவது, இலக்கணம் இலக்கியம் இரண்டையும் போற்றிப் பாதுகாத்ததாகும். தொல்காப்பியத்தில் நிறைந்த புலமை இருந்த காரணத்தால் மொழி வளர்ச்சியில் ஏற்பட்டுள்ள மாறுதல்களையெல்லாம் புறக்கணிக்க வேண்டுமென்று பேசுகின்ற ஒருசிலரிடையே திரு ரா. ரா. அவர்கள் தொல்காப்பியத்தைப் போற்றுகின்ற அதே நேரத்தில் அதனினும் மாறுபட்டு வளர்ந்திருக்கின்ற மொழி வளர்ச்சியையும் அன்போடு வரவேற்றார்கள்.

இனி திரு ஐயங்கார் அவர்களின் இவ்விரண்டு பண்புகளையும் ஓரளவு சற்று விரிவாகக் காண்டல் வேண்டும். 1938–40ம் ஆண்டுகளில் பாரதியார் பாடல்கள் பலவற்றைத் திரு சுவாமிகளிடம் பாடிக் காட்டவும், பாஞ்சாலி சபதத்தின் பல பகுதிகளிலுள்ள ஓசை நயம், பொருள் ஆழம் என்பவற்றைப் பற்றிப் பேசவும் வாய்ப்பு இருந்ததுண்டு. அப்பாடல்களைக் கேட்கும்போதும் தம்மை மறந்து ஈடுபட்டிருந்ததையும் இக்கட்டுரையாளன் கண்டதுண்டு. பிறர் பாடி சுவாமி அவர்கள் கேட்க வேண்டிய ஒரு சூழ்நிலையில்தான் அப்பொழுது இருந்தார்கள். கண் பார்வை பழுதுபட்டிருந்த காரணத்தால், எதனையும் படிக்கச் சொல்லிக் கேட்டே இன்புறுவார்கள். இடையிடையே வேப்பத்தூர் பிச்சு ஐயர் பாடல்களையும், திரு பாஸ்கர சேதுபதி அவர்கள்மேல் பாடப்பெற்ற பாடல்களையும் சொல்லிச் சொல்லிப் பரம்பரைக் கல்வியில் ஊறிவந்த என் போன்றவர்களும் தற்காலக்கல்வியில் ஈடுபடுமாறு செய்தார்கள். இங்ஙனம் கூறுவதால் அவர்கள் புதுமையிலேயே முற்றிலும் ஈடுபட்டவர்கள் போலும் என்று நினைத்துவிட வேண்டா. ஒருமுறை கிடைக்காமற் போன புறநானூற்றுப் பாடல் ஒன்று கிடைத்து விட்டதாகச் சொல்லி, எங்கள் அனைவரையும் அப்பாடலைக் கேட்குமாறு செய்து வியப்பில் ஆழ்த்தி, உண்மையில் ஏமாற்றியே விட்டார்கள். ஏனென்றால், அது திரு சுவாமி அவர்கள் தாமே இயற்றிய பாடலாகும். புறநானூற்றைப் போன்ற நடையில் பாடவும், 'பாரி காதை', 'புவி எழுபது' போன்ற தம் நூல்களில் தம்முடைய புலமைத் திறத்தைப் பழைமை, புதுமை என்ற இரண்டிலும் காட்டவும் பெரும் தகுதி பெற்றிருந்தார்கள்.

தெருவில் பிச்சை எடுக்க வருகின்ற ''காம்பிலி'' நாட்டுப் பெண்கள், அழகிய சிறு

நூற்றாண்டு விழா எடுப்பிக்கப்பெறும் பேராசிரியர் ரா. ராகவய்யங்கார்



பொம்மை ஒன்றைத் தம் வலக் கையில் வைத்துக் கொண்டு தம்முடைய கட்டை விரலையும் பாம்பு விரலையும் அப் பொம்மையின் இரண்டு கைகளுக்குள் நுழைத்துக்கொண்டு 'டக்டக்' என்று அடித்துத் தாளம் போட்டு, "சின்னிப் பாட்டு" என்று பாடிக் கொண்டு வருவார்கள். அங்ஙனம் பாடுகின்ற ஒரு பெண் "சந்திரமதி" வரலாற்றைப் பாடும்போது.

"சந்தனம் அளைந்த கையால்
சாணி வாரக் காலமாச்சே!

குங்குமம் அளைந்த கையால்
குப்பை வாரக் காலமாச்சே!"

என்று பாடிச் சென்றதை வகுப்பில் உள்ள எங்களுக்கு சுவாமி அவர்கள் பாடிக் காட்டினார்கள். இந்த எளிய நாடோடிப் பாடலில் உள்ள அவலச் சுவை, அதிலுள்ள ஓசை நயத்தால் எவ்வளவு அழகாக வெளிப்படுகிறது என்று பேசிக் கொண்டே வந்த பேராசிரியர் தம்மை மறந்து பல நிமிஷங்கள் கண்களை மூடிக் கொண்டு இருந்ததை இவ்வாசிரியன் இன்னும் மறக்க முடியவில்லை.

இக்காலத்தில் வாழ்கின்ற புதுமைப் புலவர்கள் புதுமையைப் போற்றுவதில் சிறப்பு ஒன்றுமில்லை. ஆனால் பழமையிலேயே ஊறித் திளைத்த பேராசிரியர் ரா. ரா. அவர்கள் இத்துணை புதுமையான நாடோடிப் பாடலில் ஈடுபட்டுத் தம்மை மறக்கின்றாரெனில் அவருடைய கவி நயம் காணும் உள்ளத்தை இன்று நினைத்தாலும் மெய் சிலிர்க்கின்றது. ஆம்; உண்மையான கவி நயத்தில் ஈடுபடும் நெஞ்சம் புறநானூறாகட்டும், சின்னிப் பாட்டு ஆகட்டும் எதுவாக இருப்பினும் அதில் ஈடுபடுவது முறைதானே! புறநானூற்றில் மட்டும் ஈடுபட்டுவிட்டுச் சின்னிப் பாடலில் ஈடுபட மறுத்தால் அது உண்மையான ரசிக உள்ளம் ஆகாது. பழமையில் பழமையையும், புதுமையில் புதுமையையும் கண்டு இரண்டையும் ஒருசேர அனுபவிக்கின்ற ரசிக உள்ளம், கவி உள்ளம், 'ஸஹ்ருதயம்' பேராசிரியர் ரா. ரா. அவர்களுடையது.

இலக்கணம் என்பது மரபு கெடாமல் மொழியைக் காப்பதற்கு ஏற்பட்ட ஒன்றே தவிர வேறு ஒன்றும் அன்று. அது 'இலக்கியம் என்ற பூங்காவைக் காவல் செய்யும் வேலியே' தவிர அதுவே பூங்கா அன்று. இவ் வுண்மையை நன்கு அறிந்த பேராசிரியர் ரா. ரா. போன்றவர்கள் அவ்வவற்றுக்குரிய இடத்தை அறிந்து தக்க அளவு மதிப்புத் தந்தார்கள். உயிருள்ள, வளர்கின்ற மொழி, மாற்றத்தை வரவேற்கும் என்ற பேருண்மையையும், அவர்கள் அறிந்திருந்தார்கள். அதனால் புதுமையைக் கண்டபொழுது சீறி விழாமல் அன்போடு ஏற்றுக் கொண்டார்கள்.

இந்த நூற்றுண்டின் இணையற்ற தமிழ்ப் புலவர் ஒருசிலருள் ஒருவராவார் மகா வித்துவான் பாஷா கவி சேகரர் திரு ரா. இராகவய்யங்கார் அவர்கள். இராமநாதபுரம் சமஸ்தானத்தில் அவைக்களப் புலவராக இருந்து பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பெரும் பணியாற்றியவர் இப் புலவர் பெருமான்.

பேராசிரியர் ரா. ரா. அவர்களிடம் காணப்பட்ட மற்றொரு தனிச் சிறப்பு, புலமையை எங்கே கண்டாலும், யாரிடம் கண்டாலும் வஞ்சகம் இல்லாமல் பாராட்டுவதாகும். 'பெருஞ்சொல் விளக்கனார்' அ.மு. சரவண முதலியார் அவர்கள் ஒருமுறை, பெரியபுராணம் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்த பேராசிரியர் ரா. ரா. அவர்கள் அவர் பேசி முடித்தவுடன், அவரைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, "சரவணா! வைஷ்ணவத்துக்கு ஒரு சேக்கிழார் இல்லாமல் போனது எவ்வளவு பெரிய துரதிர்ஷ்டம் என்று இப்பொழுதுதான் தெரிகிறது" என்று கூறினார். அரை விநாடி கழித்து, "அதற்காக நீ மிகவும் சந்தோஷப்பட்டு விட வேண்டாம். உனக்கும் (சைவராகிய உனக்கும்) ஒரு பெரிய வாச்சான் பிள்ளை இல்லாமல் போனது பெரிய துரதிர்ஷ்டம்தான்" என்று கூறினார்.)

ஆழ்வார்கள் வரலாற்றைச் சேக்கிழார் போன்ற தெய்வப் புலவர் பாடியிருப்பின் அது எப்படி இருக்கும் என்றும், பெரிய வாச்சான் பிள்ளை போன்ற வியாக்கியான கருத்தாக்கள் தேவாரம், திருவாசகம் ஆகியவற்றுக்கு உரை எழுதியிருந்தால் அது எப்படி இருக்கும் என்றும் பிறகு நீண்ட நேரம் திரு சுவாமி அவர்களும் திரு முதலியார் அவர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

புலமையைக் கண்டபோது பாராட்டுகின்ற திரு சுவாமி அவர்கள் போலிப் புலமையைக் கண்டபொழுது கொஞ்சமும் அஞ்சாமல் அதனைச் சாடவும் செய்வார். தற்காலம் போல் ஒன்றும் இல்லாதவர்களையும் தட்டிக் கொடுத்துப் போற்றி, "ஆகா! ஓஹோ" என்று சொல்லுகின்ற மரபு அற்றை நாளில் இல்லை. கருத்து வேற்றுமைக்கு மதிப்புக் கொடுப்பதென்பது மனிதனுடைய பண்பாடுகளுள் ஒன்று. நிறைந்த அறிவும் புலமையும் பெற்றிருப்பதுடன், பரந்த உள்ளமும் உடையவர்களே கருத்து வேற்றுமையை வரவேற்க முடியும். பேராசிரியர் ரா. ரா. அவர்கள் மாணவராகிய எங்களிடம் கருத்து வேற்றுமை கண்டபொழுது சினக்காமலும், மாணவர்கள்தாமே என்று ஒதுக்காமலும் பல மணி நேரம் தமது கருத்தை நிலைநாட்ட வாதிடுவார்கள். இந்த அளவு வரை செல்லுகின்ற புலவர்களைக் காண்பதே ஓரளவு கடினம்தான். ஆனால் இதற்கு ஒரு படி மேல் சென்று தம் கருத்தைத் தவறு என்று ஒப்புக் கொள்கின்ற பரந்த மனம் திரு சுவாமிகளுடையது.

"சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்"

(குறள் — 986)

பண்புடையவர்கள் சாதாரண மக்களிடத்தும் கூடத் தோல்வியை ஒப்புக் கொள்வர் என்ற கருத்துடைய இக் குறளுக்கு இலக்கியமாக வாழ்ந்து தமிழுள்ளளவும் தம் பெயரை நிலைநிறுத்திச் சென்றார் இற்றைக்கு நூறாண்டுகட்கு முன் பிறந்த பேராசிரியர் ரா. ராகவய்யங்கார் சுவாமி அவர்கள்.




## 8. அறிமுகம்

'பாரதமணி'ப் பத்திரிகைக் காரியாலயம் இருந்த தெருவில் உள்ள விளக்குகள் கஞ்சத்தனமாக ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தன. காரைத் தெருவாசலுக்கு வெளியே நிறுத்திவிட்டுச் சுற்றுமுற்றும் கவனித்தான் முரளி. காம்பௌண்டுச் சுவருக்குப் பக்கத்தில் கற்கள் சிதறிக் கிடந்தன. தெருவில் வேறு ஆள் நடமாட்டம் இல்லை. 'பாரதமணி'க் கட்டடத்துக்குள் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. கண்ணாடி சன்னல்கள் உடைந்திருந்த காட்சி தெருவிலிருந்தே நன்றாகத் தெரிந்தது. திடீரென்று முரளியின் கண்களில் காம்பவுண்டுச் சுவரில் ஒட்டியிருந்த படம் தென்படவே, காரிலிருந்த டார்ச்சை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினான். சுவரில் ஒட்டப்பட்டிருந்த படத்தின் மீது டார்ச்சின் ஒளியைப் பாய்ச்சினான்.

அந்தப் படத்தில் மாசே துங் காட்சியளித்தார். சீனத் தலைவருக்கும், 'பாரதமணி' காம்பவுண்டுச் சுவருக்கும் என்ன உறவு....?

அந்த உறவைப் புரிந்து கொண்ட முரளியின் கண்கள் சிவந்தன. கோபத்துடன் சுவரிலிருந்த படத்தைக் கிழிக்கக் கையை நீட்டினான். மறுகணம் தயங்கி நின்றான். பிறகு, காரில் ஏறிக்கொண்டு காம்பவுண்டுக்குள் நுழைந்து கட்டடத்தின் முன்னால் போய் இறங்கினான்.

* * *

இரவு ஒன்பது மணிக்குச் சைக்கிளில் சென்று கொண்டிருந்தான் சிவராமன். தலைவர் வேதமூர்த்தியைப் பற்றிய நினைவு, அவனை அன்று முழுதும் ஆட்கொண்டிருந்தது. அவன் மீது அவர் கொண்டிருக்கும் அன்பையும், நம்பிக்கையையும் நன்றாக உணர்ந்திருந்தான். ஆனால், அவனுக்கு ஒரு விஷயந்தான் மனத்துக்குப் பிடிக்கவில்லை. வேதமூர்த்தியின் மூர்க்கமான குணமும், தாம் நினைத்ததை நிறைவேற்றக் கையாளும் கண்டிப்பும், பிடிவாதமும் சிவராமனுக்கு உள்ளூற எரிச்சலை ஊட்டின. மற்றவர்களுடைய உணர்ச்சிகளுக்கு எவ்வித மதிப்பும் கொடுக்காத தலைவரின் போக்கு, திகைப்பை உண்டாக்கியது.

அவனைக் கட்சியில் சேர்த்து, தட்டிக் கொட்டி அந்த அளவுக்கு ஆளாக்கியவரே வேதமூர்த்திதாம். கட்சியைப் பற்றிய பல விஷயங்களையும், தத்துவங்களையும் பால பாடம் மாதிரி விளக்கி மனத்தில் பதிய வைத்து, இன்று கட்சிக்காக அனைத்தையும் அர்ப்பணிக்கும் நிலையில் அவனைப் பக்குவப்படுத்திய பெருமை அனைத்தும் வேதமூர்த்தியைத்தாம் சேரும். அவன் மீது அவருக்குத் தனிப்பட்ட ஈடுபாடு, அசைக்க முடியாத நம்பிக்கை.

ஆறு மாதங்களுக்குமுன் பொது மேடையில் அவனை அறிமுகப்படுத்திப் பேச வைத்து விட்டுப் பிறகு அவனை எவ்வளவு புகழ்ந்து போற்றினார்....! அதை நினைத்தபோது சிவராமனின் கண்களில் நன்றிப் பெருக்கால் நீர் கசிந்தது. இப்படிப் பல நினைவுகளை நெஞ்சில் புரள விட்டுக் கொண்டு சைக்கிளில் சென்று கொண்டிருந்தான் சிவராமன். மெயின் ரோடும் 'பாரதமணி'க் காரியாலயம் இருக்கும் தெருவும் சந்திக்கும் இடத்தை நெருங்கியதும் நாலைந்து நபர்கள் 'பாரதமணி'க் காரியாலயத் தெருவிலிருந்து மெயின் ரோடுக்கு விரைந்து வந்து அவனுக்கு

முன்னால் ஓடினார்கள். அவர்களைக் கண்டதும் சிந்தனை தடைப்பட்டு ஒருகணம் திகைத்தான். முன்னால் ஓடுபவர்களைச் சைக்கிளில் துரத்திச் சென்று யார் என்று அறியலாமா என்று முதலில் நினைத்தான்: பிறகு, அந்த எண்ணத்தை விட்டு விட்டுச் சைக்கிளில் மெதுவாகவே செல்லத் தொடங்கினான். அவனுக்கு முன்னால் ஓடியவர்கள், சற்று நேரத்தில் மறைந்து விட்டார்கள். நிலவொளியில் அவர்களை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவர்களில் ஒருவன் தலையில் முண்டாசு கட்டியிருந்தான். கிருதா மீசையும் வைத்திருந்தான். வேறு அடையாளம் ஒன்றும் மங்கிய நிலவொளியில் தெரியவில்லை.

திருடர்களாயிருப்பார்களோ.....? வேறு ஏதாவது குற்றம் புரிந்து விட்டு ஓடுகிறார்களோ....? இந்த நேரத்தில் தெருவில் இப்படி ஓடுவானேன்.....? யாராயிருந்தால் நமக்கு என்ன....?

சிவராமனுக்கு மேலே சிந்தனை ஓடவில்லை. மங்கிய நிலவொளியில்—குளிர்ந்த வேளையில் சைக்கிளில் மெதுவாகப் போய்க் கொண்டிருப்பது சுகமாயிருந்தது. முரளியைப் பற்றிய நினைவு வந்தது.

அவனுடைய நினைவு வந்ததும் சிவராமனிடம் புத்துணர்வு தோன்றியது. தனக்குள்ளேயே நினைத்து நினைத்து மகிழ்ந்து கொண்டான்.

கல்லூரியில் முரளியோடு கழிந்த காலம் எவ்வளவு இனிமையாக, தெம்புடன் இருந்தது. கொஞ்சம் பிடிவாதக்காரன். 'தான் பிடித்த முயலுக்கு மூன்று கால்' என்று சாதிப்பான்... ஹூம், நான் மட்டும் பிடிவாதக்காரன் இல்லையா...? எந்த விஷயமானாலும் முரளி ஆழ்ந்து சிந்தித்துத் தெளிவு பெற்றுவிடுவான். அவனுக்குத்தான் என் மீது எவ்வளவு பிரியம்! கம்யூனிஸ்ட் கட்சியில் இரகசியமாக ஈடுபட்டிருக்கிறேன் என்று தெரிந்த போது எப்படிப் பதறிப் போனான்! அப்போது அவன் கண்களில் தோன்றிய பயம். முகம் போன போக்கு.... இப்போது நினைத்தாலும் சிரிப்பாயிருக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சி என்ன அவ்வளவு பயங்கரமான அருவருக்கத்தக்க ஒரு கட்சியா...? பயங்கரமான அருவருக்கத்தக்க ஒரு விஷக் கிருமியைக் கண்டு நடுங்குவது போல் ஒரு கணம் திடுக்கிட்டுத் திகைத்து நின்றானே...! அவனுக்குக் கம்யூனிஸக் கொள்கையில் நம்பிக்கை இல்லை. ஆனால் அந்த ஒரு கொள்கைதான் மனித இனத்தின் ஜீவ நாடி என்றல்லவா நான் உறுதியாக நம்புகிறேன். என்னை அப்படி நம்ப வைப்பதற்குத் தலைவர் வேதமூர்த்தி எடுத்துக் கொண்ட முயற்சியும், அக்கறையும்.... உண்மையிலேயே வேதமூர்த்தி ஒரு பிறவித் தலைவர்தாம். இவரைப்போல் எல்லாத் தலைவர்களும் அமைந்து விட்டால், இந்த உலகம் எப்படி மாறிவிடும்....

முதன் முதலில் தலைவர் வேதமூர்த்தியைக் கண்ட போது சிவராமன் பரபரப்பும், உற்சாகமும் அடைந்த சம்பவம் நினைவுக்கு வந்தது.

* * *

ஒரு நாள் இரவு ஒன்பது மணிக்குச் சிவராமன், கஸ்தூரி அய்யர் ஹோட்டலில் ஒரு மூலையில் கிடந்த மேஜைக்கு முன் அமர்ந்திருந்தான், ஒரு கப் தேநீர் கொண்டு வரும்படி சொல்லிவிட்டு.

அவனுக்கு எதிரே இருந்த நாற்காலியில் ஒருவன்வந்து உட்கார்ந்தான். சிவராமனைப் பார்த்து இலேசாகச் சிரித்தான். தனிமையை நாடி



வந்த சிவராமனுக்கு, எதிரே ஒருவன் வந்து உட்கார்ந்தது பிடிக்கவில்லை. கவனத்தைச் சன்னல் வழியாக வெளியே செலுத்தினான்.

''என்ன தம்பி ! என்னைப் பார்க்கப் பிடிக்கவில்லையா?'' என்று கேட்டான் எதிரே இருந்தவன்.

சிவராமன் பார்வையை அவன் மீது செலுத்தினான். அவனுக்கு முப்பது வயது இருக்கும். ஒல்லியான உடல். எதிராளியைத் துளாவும் கண்கள். முகத்தில் அளவாக வெட்டப்பட்டிருந்த சிறு மீசை முகத்துக்குக் கவர்ச்சியைக் கொடுத்தது. வேட்டியும் ஜுப்பாவும் போட்டிருந்தான். சிவராமனைப் பார்த்து முறுவலித்தான். அவனோடு முதலில் பேசப் பிரியப்படாத சிவராமன் இதற்குள் அவனுடைய கவர்ச்சியான முகத்தாலும், அமைதியான பார்வையாலும் ஈர்க்கப்பட்டிருந்தான்.

''நீங்கள்....'' என்று சந்தேகத்துடன் கேட்டான் சிவராமன்.

''என் பெயர் நல்லதம்பி.''

''ஓ... கம்யூனிஸ்ட் கட்சியின்-வட்டாரக் காரியதரிசி....?'' வியப்புடன் கேட்டான் சிவராமன். நல்லதம்பி புன்முறுவலுடன் தலையை அசைத்தான். சிவராமன் பரபரப்படைந்தான்.



''உங்கள் கட்சியின் கொள்கைகளில் எனக்கும் ஈடுபாடு உண்டு'' என்றான், சிவராமன் ஆவலோடு.

''தெரியும்.... போன வாரம் பார்க்கில் நீ உன் நண்பனோடு அரசியலைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்ததைக் கேட்டேன். உன்னைப் போன்ற இளைஞர்களால்தான் இன்று நம் கட்சி நல்ல வளர்ச்சியைப் பெற்றிருக்கிறது.''

''கட்சியில் சேர விரும்புகிறேன். சேர்த்துக் கொள்வீர்களா?'' என்று மிகுந்த ஆவலோடும், பரபரப்புடனும் கேட்டான் சிவராமன்.

நல்லதம்பியின் உதட்டில் புன்முறுவல் தோன்றியது. பணியாள் கொண்டு வந்த தேநீரை நல்லதம்பியிடம் நீட்டினான் சிவராமன்.

''வேண்டாம். காப்பிக்குச் சொல்லியிருக்கிறேன்'' என்றான் நல்லதம்பி.

''கட்சியில் நான் சேரலாமா? அதற்கு என்ன செய்ய வேண்டும்?'' — சிவராமன் மீண்டும் கேட்டான்.

''கட்சியில் சேர்ந்துதான் கட்சிக்குப் பணி புரிய முடியும் என்பதில்லை. கட்சியின் அபிமானியாக இருந்து கொண்டே கட்சிக்கு உதவலாமே?'' என்றான் நல்லதம்பி.

''கட்சியில் சேர்ந்து தீவிரமாக உழைக்க வேண்டும் என்று ஆசை.... நீங்கள் எவ்விதப் பணியைக் கொடுத்தாலும் செய்யத் தயார்.''

''நமக்குள் மரியாதை வார்த்தை வேண்டாமே; நீ என்றே கூப்பிடு.... வருகிற ஞாயிற்றுக்கிழமை இதே இடத்தில் மாலை ஆறு மணிக்குச் சந்தித்துப் பேசலாம்'' என்று கூறிவிட்டுப் பணியாள் கொண்டு வந்த காப்பியைக் குடிக்கத் தொடங்கினான் நல்லதம்பி.

''அடுத்த வாரத்தில் நான் கட்சியில் சேரலாம் அல்லவா?''

''பார்க்கலாம்'' என்று கூறிவிட்டு எழுந்தான் நல்லதம்பி.

ஞாயிறன்று மாலையில் முரளிக்குத் தெரியாமல் சிவராமன், கஸ்தூரி ஐயர் ஹோட்டலுக்கு வந்து காத்திருந்தான். மழைக் காலமாதலால் ஆறு மணிக்கே இருட்டி விட்டது. சற்று நேரத்தில் நல்லதம்பி வந்து சேர்ந்தான். அவனோடு ஓர் இளம் பெண்ணும் வந்திருந்தாள். அவளைக் கண்டதும் சிவராமன் திடுக்கிட்டான். அவளோ, சிவராமனைப் பார்த்து அடக்கமாகச் சிரித்தாள். அவளுக்கு இருபத்திரண்டு வயது இருக்கும். ஒல்லியாக வளர்ந்திருந்தாள். நீண்ட மூக்கும், அகன்ற கண்களும் கவர்ச்சியைக் கொடுத்தன. கண்களில் தோன்றிய அலட்சியப் பார்வை, அவளை ஒரு கர்வக்காரி போல் காட்டியது. அவளும் சிவராமனோடுதான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாள். மூவரும் குடும்பத்தார் அமர்ந்து சாப்பிடும் தனியறைக்குள் சென்றார்கள். நல்லதம்பி, மூன்று கப் தேநீர் கொண்டு வரும்படி கூறிவிட்டுச் சிவராமனுக்கு எதிரே அமர்ந்தான். அந்தப் பெண் சிவராமனுக்கு இடது புறத்தில் அமர்ந்தாள். சிவராமன், அவளையே வியப்புடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்னை நீங்கள் எதிர்பார்க்கவில்லை இல்லையா?'' — அவள் கேட்டாள். சிவராமன், தலையை அசைத்தான். அவளைக் கண்டதனால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து அவன் விடுபடவில்லை.

''காந்தாமணி உன்னைப் பற்றி நிறையச் சொல்லி யிருக்கிறாள்'' என்றான் நல்லதம்பி, சிவராமனிடம்.

''ஓ....! இவளும் கம்யூனிஸ்ட் கட்சியில்....?'' — சிவராமன் வியப்புடன் கேட்டான்.

''அனுதாபம் கொண்டவள்'' என்றான் நல்லதம்பி.

பணியாள் கொண்டு வந்த தேநீரை மூவரும் அருந்திக் கொண்டே பேசினார்கள். அன்றைய அரசியல் சூழ்நிலை பற்றியும், அதில் பொதுவுடைமைக் கட்சிக்கான மாணவர்களுடைய பணி பற்றியும் பேசினார்கள். காந்தாமணி, பேச்சில் கலந்து கொள்ளாமல், பேசுவதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

''இனி நாம் அடிக்கடி சந்திக்கலாம். காந்தாமணி எனக்குப் பதிலாக உன்னைச் சந்திப்பாள். என்னிடம் ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால், காந்தாமணி மூலமாகச் சொல்லி அனுப்பு..... நான் உன்னோடு தொடர்புகொண்டிருப்பது வெளியே தெரியாமல் இருப்பது நல்லது'' என்று கூறிவிட்டு எழுந்தான் நல்லதம்பி. அவனைத் தொடர்ந்து காந்தாமணியும் எழுந்தாள். அந்த அறையின் வாசலை நெருங்கியதும்தான் கட்சியில் தான் சேருவதைப் பற்றி நல்லதம்பி ஒன்றும் முடிவாகச் சொல்லவில்லையே என்று நினைத்தான் சிவராமன். பரபரப்புடன் நல்லதம்பியை நெருங்கினான்.

''கட்சியில் நான் எப்போது சேருவது?'' என்று கேட்டான்.

''அடுத்த முறை சந்திக்கும் போது காந்தாமணியிடம் கேள். இது பற்றித் தெரிவிப்பாள்'' என்று கூறிவிட்டுச் சென்றான் நல்லதம்பி.

நல்ல தம்பியும் காந்தாமணியும் ஹோட்டலை விட்டுச் சென்ற போது

சேர்ந்து செல்லாமல் வெவ்வேறு திசையில் சென்றனர். வெகு நேரமாகியும் சிவராமன் திகைப்பிலிருந்து விடுபடவில்லை. அவனோடு படிக்கும் காந்தாமணி, ஒரு புரட்சிகரமான பெண் என்பதை அறிந்து வியப்பில் ஆழ்ந்தான். கல்லூரியில் தினமும் அவளைச் சந்திக்கிறான்; அடிக்கடி பேசுகிறான்; ஆனால், இப்படிப் புரட்சிகரமான செயலில் ஈடுபட்டிருக்கிறாள் என்பதே வெளியே தெரியாமல் எவ்வளவு சாமர்த்தியமாக நடந்து கொண்டிருக்கிறாள் என்பதை எண்ணி எண்ணி வியந்தான். அவளுடைய அடக்கமான போக்கையும், எதையும் ஆழ்ந்து கவனிக்கும் பாங்கையும், அதிகமாகப் பேசாமல் பிறர் பேசுவதைக் கவனமாகக் கேட்கும் தன்மையையும், நாணிக் கோணாமல் நிமிர்ந்து நடக்கும் அழகையும் இப்போது நினைத்துப் பார்த்து, அவள் கட்சியில் பொறுப்பான பதவி வகிக்கத் தகுந்தவள்தான் என்று எண்ணிக் கொண்டான்.



ஜப்பானில் நடைபெறும் எக்ஸ்போ-70ல் ஸ்ரீமதி ஸோனல் மான்சிங் நடனமாடிய பிறகு, ஜப்பானியப் பட்டத்து இளவரசரும், இளவரசி மிச்சிகோவும் ஸ்ரீமதி ஸோனல் மான்சிங்கோடு அளவளாவுகின்றனர்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு கல்லூரி லைப்ரரியில் காந்தாமணியைச் சந்தித்த போது, அவளுடைய கையில் ஒரு சிறு புத்தகத்தைத் திணித்து விட்டு விரைந்து சென்று விட்டாள். புத்தகத்தைப் புரட்டிப் பார்த்த போது, உள்ளே ஒரு துண்டுக் கடிதம் இருந்தது. அதில் மாலை ஐந்து மணி என்று எழுதியிருந்தது.

அன்று மாலை கஸ்தூரி ஐயர் ஹோட்டலில் சிவராமன் காத்திருந்தான். காந்தாமணி வந்ததும் இருவரும் தனி அறைக்குள் சென்று அமர்ந்தார்கள். கட்சியில் தான் சேருவதைப் பற்றிக் கேட்டான் சிவராமன்.

"அவசரப்படாதீர்கள். கட்சியில் இலகுவில் தீவிர அங்கத்தினராகச் சேர முடியாது."

அப்போது பணியாள் காப்பியைக் கொண்டு வந்து மேஜையின்மீது வைத்து விட்டுச் சென்றான். காப்பியை அருந்திக் கொண்டே காந்தாமணி தொடர்ந்தாள்: "அதற்கு மேலிடத்திலிருந்து அனுமதி வேண்டும்."

"உன்னால் அதற்கு வேண்டியதைச் செய்ய முடியாதா?"

"கட்டாயம் கட்சியில் தீவிர அங்கத்தினராகத்தான் சேர வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்தினால், சேர்த்துக் கொள்வதில் ஆட்சேபனை இருக்காது. ஆனால் நீங்கள் கட்சியின் தீவிர அங்கத்தினர் என்பது இரகசியமா யிருக்க வேண்டியிருக்கும். உங்களுடைய உண்மைப் பெயரில் நீங்கள் அங்கத்தினராகவோ அல்லது அனுதாபியாகவோ இருக்கலாம். ஆனால் தீவிர அங்கத்தினராக இருக்க முடியாது."

"பின்னே....?"

"மாற்றுப் பெயரில்தான் உங்கள் பெயரைப் பதிவு செய்வார்கள்.... அடுத்த முறை வரும்போது அதற்கு வேண்டியதைக் கவனித்துக் கொண்டு வருகிறேன். என்ன பெயரில் உங்களைத் தீவிர அங்கத்தினராகப் பதிவு செய்யலாம்?" என்று கேட்டாள் காந்தாமணி.

சற்று யோசித்தான் சிவராமன். பிறகு, "கோதண்டம்" என்றான்.

"அழகான பெயர்" என்று கூறி விட்டு, முத்துப் பற்கள் தெரியச் சிரித்தாள் காந்தாமணி.

இரண்டு நாட்களுக்குப் பிறகு மாலையில், காந்தாமணி, சிவராமனை அழைத்துக் கொண்டு சென்றாள். தெப்பக் குளத்துக்குப் பக்கத்திலிருந்த ஒரு சந்துக்குள் திரும்பி ஒரு சிறு வீட்டுக்குள் நுழைந்தார்கள். ஏற்கனவே அந்தச் சிறு வீட்டின் உள் அறையில் இருபது பேர் இருந்தனர். காந்தாமணியைக் கண்டதும் அனைவரும் மரியாதையாக எழுந்து நின்றனர். அறையின் ஓர் ஓரத்தில் ஒரு 'பெஞ்சு' கிடந்தது. அதில்



''என் தியேட்டரில் இப்போ ஓடற படத்தை நீங்க அவசியம் பார்க்கணும். ரத்தத்தை உறைய வைக்கிற காட்சிகள் நிறைய இருக்கு சார்!''

''உங்க தியேட்டர் நாற்காலியில் இருக்கிற மூட்டைப்பூச்சிகள் உறிஞ்சின பிறகு உறையறதுக்கு ரத்தம் எங்கே சார் இருக்கப் போகுது?''

காந்தாமணி அமர்ந்ததும் மற்றவர்கள் தரையில் அமர்ந்தார்கள். சிவராமனை எல்லாருக்கும் கோதண்டம் என்ற பெயரில் அறிமுகம் செய்து வைத்தான். சிவராமனும் அவர்களோடு தரையில் உட்கார்ந்து கொண்டான்.

பொதுவுடைமைக் கட்சியின் சித்தாந்தத்தையும், உலகத்தில் முதலாளி வர்க்கத்தினரின் கொடுமைகளையும், பாட்டாளிகளின் அவல நிலையையும் பற்றி அவர்களிடம் பேசினான் காந்தாமணி. பாட்டாளி வர்க்கத்தினருக்காக எதிர்காலம் காத்திருப்பதாகவும், அந்த எதிர்காலம் துப்பாக்கி முனையில்தான் வரவேண்டியிருக்குமே தவிர, பூர்ஷ்வாக்களின் ஜனநாயகத்தால் முடியாது என்றும் விளக்கிக் கூறினான். அங்கு கூடியிருந்த தோழர்கள் அனைவரும் மிகுந்த அக்கறையுடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சூழ்நிலை சிவராமனுக்கு ஒரு விதப் பரபரப்பைக் கொடுத்தது. இரத்தம் சூடேறியது. அவனுள் வெறி ஏறுவது போலிருந்தது. கட்சியில் தீவிரமாக ஈடுபட்டுவிடத் துடித்தான். காந்தாமணியை அடங்காத வியப்புடன் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய தீவிரமும், துணிவும், அங்கு கூடியிருந்தவர்களிடம் அவன் பெற்றிருக்கும் மதிப்பும் கம்யூனிஸ்ட் கட்சியில் அவன் ஒரு முக்கியமான நபர் என்பதை எடுத்துக் காட்டின.

அந்தக் கூட்டம் முடிந்து சிவராமனும் காந்தாமணியும் தெரு வழியாகச் சென்று கொண்டிருந்தபோது சிவராமன் கேட்டான்:

''இதென்ன கூட்டம்?''

''இவர்களுக்கு வாரம் ஒரு முறை கட்சிச் சித்தாந்தம் பற்றி வகுப்பு நடத்தி வருகிறேன். நாலைந்து மாதங்களுக்கு ஒரு முறை நான் பிரசாரம் செய்ய வேண்டிய இடம் மாறும்.''

''இவர்கள் கட்சியில் அங்கத்தினர்களா?''

''இல்லை. அனுதாபிகள். கட்சியில் எல்லோரையும் அங்கத்தினராகச் சேர்த்து விடுவதில்லை. அதிலும் தீவிர அங்கத்தினராகப் பக்குவம் வேண்டும். சேர விரும்பும் நபர்மீது கட்சிக்கும் நம்பிக்கை ஏற்பட வேண்டும்.''

''நம்பிக்கை ஏற்படும்படி நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று ஆவலோடு கேட்டான் சிவராமன்.

காந்தாமணி இலேசாகச் சிரித்தான். அவன் சிரித்தது நிலவொளியில் ரம்மியமாயிருந்தது.

''அவசரப்படாதீர்கள். உங்களுடைய தீவிரமான எண்ணங்களைப் புரிந்து கொண்டேன். கொஞ்சம் பொறுங்கள். சீக்கிரமே உங்களைக் கட்சி ஏற்றுக் கொண்டு விடும்.''

''நீங்கள் தீவிர அங்கத்தினரா?'' வெடுக்கென்று கேட்டான் சிவராமன். காந்தாமணி, அவனை உற்றுப் பார்த்தான். நிலவொளியில் அவன் கண்கள் பளபளத்தன.

''கட்சியில் யார் யார் தீவிர அங்கத்தினர் என்பது யாருக்கும் தெரியாது. தான் தீவிர அங்கத்தினரா இல்லையா என்பதைச் சொல்லவும் கூடாது. அது பற்றி மற்றவரைக் கேட்கவும் கூடாது. ஏனெனில், தீவிர அங்கத்தினர்கள் தலைமறைவாயிருந்து இயங்க வேண்டிய சூழ்நிலை ஏற்படலாம்'' என்று கூறி விட்டு மௌனமாக நடந்தான் காந்தாமணி.

**ம**று நாள் இரவு பத்து மணிக்குச் சிவராமனும் முரளியும், ஹாஸ்டல் அறையில் படுத்திருந்தபோது, அறைக் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. சிவராமன் எழுந்து கதவைத் திறந்தான். முரளி கட்டிலில் படுத்தவாறே வாசலைக் கவனித்தான். வந்தவன் ஏதோ இரகசியமாகச் சிவராமனிடம் கூறினான். உடனே சிவராமன், அறைக்குள் வந்து சட்டையை மாட்டிக் கொண்டு, கையில் டார்ச்சையும் எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

''பத்து மணிக்கு மேல் எங்கே?'' என்று முரளி கேட்டான்.

''முக்கியமான விஷயம்.... போய் விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு, வெளியேறினான் சிவராமன். **(தொடரும்)**



# கவி பாடும் ஜோதி!

**இவருக்கு இதுவும் தெரியும்**

''கிருஷ்ணராயபுரம் வாகதேவ ஜகந்நாதன் அவர்கள்'' என்றால் யோசிப்பீர்கள். ''கி. வா. ஜ.'' என்று கூறினாலே அர்த்தமுடையதாக இருக்கும்.

கி. வா. ஜ. தமிழ் வித்துவான் பரீட்சையில் சென்னை மாகாணத்திலேயே முதல்வராக வந்ததும், ஐயரவர்களிடம் இருந்து தமிழ்ப் பாடம் கேட்டதும், அவர்களோடு சேர்ந்து ஓலைச் சுவடிகளைச் சேகரித்ததும், அரிய தமிழ் நூல்களை அச்சேற்றியதும் நாடறிந்த உண்மைகளாகும்.

சமயப் பணி, இலக்கியப் பணி, நூலாராய்ச்சி, நூற்பதிப்பு, கதை, கட்டுரைகளை எழுதுதல், 'கலைமகள்' பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பு, சொற்பொழிவாற்றுதல் ஆகிய பல துறைகளில் வல்லவராகத் திகழும் கி. வா. ஜ. கவிஞராகவும் விளங்குகிறார். அதுவும் நினைத்தவுடன் கவி பாடும் ஆற்றல் மிக்கவராவார். இப்படிப் பாடுபவர்களை **'ஆசு கவி'** என்று அழைப்பதுண்டு. 'ஜோதி' என்ற புனைபெயரில் பத்திரிகைகளில் வரும் கவிதைகள் கி. வா. ஜ. எழுதுபவைதாம்.

''நீங்கள் கவிதைகள் இயற்றத் தொடங்கியது எப்போது?''

''பள்ளியில் படிக்கும்போதே கவி பாட ஆரம்பித்து விட்டேன். பள்ளி மாணவர்கள், நான் கவிதை எழுதுவதாகத் தமிழாசிரியரிடம் சொல்லவே, அவர் என்னைக் கூப்பிட்டு விசாரித்தார். என் கவிதைகளைப் படித்து விட்டு ஆச்சரியத்தினால் 'குறைந்தது இதற்கு முன் இருநூறு பாடல்களாவது எழுதியிருக்க வேண்டுமே' என்று கேட்டார். ஆனால் நான் அவ்வளவு எழுதியிருக்கவில்லை'' என்று கூறினார் கி. வா. ஜ.

''பத்திரிகைகளுக்கு எப்போது முதல் எழுதத் தொடங்கினீர்கள்?'' — அவரிடம் கேள்வி.

கி. வா. ஜ. அளித்த பதில்: ''1922 முதல் கவிதைகளைப் பத்திரிகைகளுக்கு எழுதத் தொடங்கினேன். தேசியப் பாடல்களே அதிகம். புதுச்சேரியிலிருந்து 'கற்பகம்', 'ஆத்ம சக்தி', 'பராசக்தி' முதலிய பத்திரிகைகள் வெளி வந்து கொண்டிருந்தன. அப்பத்திரிகைகளில் பாரதி தாசன் கவிதைகளோடு என் கவிதைகளும் சேர்ந்தே பிரசுரிக்கப்பட்டன.''

''ஐயரவர்களிடம் மாணவராக இருந்த அந்தக் காலத்தில், ஏதேனும் சுவையான சம்பவம் நிகழ்ந்திருக்கிறதா?''

''ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. பின்னத்தூர் சுப்பிரமணிய ஐயருக்கு ஐயரவர்கள் என்னை அறிமுகப்படுத்தியபோது 'ஈற்றடி வைத்துப் பாடுவாயா?' எனக் கேட்டார் சுப்பிரமணிய ஐயர். 'முயல்கிறேன்' என்றேன். உடனே 'முல்லை எடுத்து சண்பகத்தில் முடிக்க வேண்டும். எல்லாம் மலராக இருக்கணும்!' என்றார்.

முல்லை முறுவல் முளரி திருவதனம்
அல்லில் அலரும் கருங்குவளை - நல்லவிழி
நாடற்கரிய நலத்தாள் இவட்குடலம்
பாடற் பெறுசண் பகம்

எனப் பாடினேன். அகமகிழ்ந்தார்கள்.''

''கவிதை எழுத 'ஜோதி' என்ற புனை பெயரை ஏன் வைத்துக் கொண்டீர்கள்?''

''நானாக அந்தப் பெயரை வைத்துக்கொள்ளவில்லை. காலஞ்சென்ற சங்கு சுப்பிரமணியம் தான் 'ஜோதி' என்ற பெயர் கொடுத்து, இந்தப் பெயரில் எழுதுங்கள் என்றார்.''

கி. வா. ஜ. இயற்றிய பாடல்கள் கணக்கிலடங்கா. பல கவிதை நூல்கள் வெளிவந்திருக்கின்றன.

டைபாய்டு ஜுரத்தில் இரண்டு மாதங்கள் படுத்திருந்தபோது டாக்டர்களின் கண்டிப்பான உத்தரவுகளை மீறி, ஓசைப்படாமல் ஓராயிரம் கவிதைகளை எழுதிவிட்டார். அந்த ஆயிரம் பாட்டுக்களும் இலங்கையிலுள்ள குரும்பராய் என்னுமிடத்தில் கோயில்கொண்டுள்ள சிதம்பர சுப்பிரமண்யம் பேரில் பாடியவை. நூலாகவும் இலங்கையில் வெளியிட்டிருக்கிறார்களாம்.

பாரீஸ் மாநகரில் மூன்றாம் உலகத் தமிழ் மகாநாட்டில் கி. வா. ஜ. வின் குரல்தான் முதன் முதலில் ஒலித்தது. தவத்திரு தனிநாயக அடிகள் அங்கே மகாநாடு தொடங்கும்போது இறைவணக்கம் ஒன்று பாடவேண்டும் என்று விரும்பினாராம். ஓரிரு நிமிடங்களில் கி.வா.ஜ. இறை வணக்கப் பாட்டை எழுதி, ஒலிபெருக்கியில் பாடினார். அப் பாடல் இதோ:

பாரதியார் கனவுகண்ட படிஇன்று
தமிழ், உலகம் பரவி நிற்கும்
சீரதனைக் காண்கின்றோம்: இன்றிந்தப்
பாரிஸில் சிறப்பக் கூடி
நேரிய தமிழாய்வும் தமிழ்முழக்கும்
பரப்புதற்கு நினைந்து வந்தோம்
ஏருடைய தமிழணங்கின் புகழ்பாடி
மனம் களித்தே ஏத்தல் செய்வாம்.

பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**

---

படம்: பாரீஸ் மகாநாட்டில் இறைவணக்கப் பாடலைப் பாடுகிறார் திரு கி. வா. ஜ. அருகே அமைச்சர் மதியழகன் ஆதிசேஷய்யா, ஃபிலியோஸா, முதல்வர் கருணாநிதி.



# ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கி விட்டன

இந்திரா பார்த்தசாரதி

## 12

'பானு இதை எதற்காகக் கூற வேண்டும்?' அமிர்தம் யோசனையில் ஆழ்ந்தான். உலக இயல்பாக இதைக் கூறி விட்டுத் தன் அம்மா, இருவருக்கும் உள்ள நட்பைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறாள் என்பதைப் பானு கூறாமல் கூறுகிறாளா? — இதைச் சொல்வதன் மூலம் தனக்கும் ஓர் எச்சரிக்கை தருகின்றாளா, அல்லது பிரச்னையைச் சொல்லிவிட்டு, அதாவது அவனுக்குத் திருமணம் ஆகிவிட்டது என்று சொல்லிக் காட்டுவதனால் 'இதற்கு என்ன செய்யப் போகின்றீர்கள்?' என்கிறாளா?

''நீ உன் அம்மா சொன்னதைப் புரிந்து கொண்டால் வாக்குவாதம் எதுக்காக?'' என்றான் அமிர்தம்.

''நான் உங்களுக்கு முன்னாலேயே சொன்ன மாதிரி, நான் எதைப் பத்தியும் கலபமாக முடிவு செய்யறதில்லே. முடிவு செஞ்சப்புறம் அதைப் பத்தி எந்த விதமான குழப்பமோ, தயக்கமோ கிடையாது. உங்களைப் பார்க்கிறதுன்னு தீர்மானம் செஞ்ச பிறகு என் அம்மா என்ன சொன்னாலும் அதை நான் கேட்கத் தயாரா இல்லே... என் அம்மாவும் என் மாதிரி ஒரு 'ஸ்ட்ராங் காரெக்டர்'ங்கிறதினாலேதான் இந்தப் போராட்டம்! கதவைப் பூட்டிண்டு போயிட்டா. அப்புறமும் நான் ஃபோன் பண்ணினேன்...''

''அப்படி என்னைப் பார்க்கணும்னு உனக்கென்ன வேகம்?'' என்று கேட்டான் அமிர்தம்.

''இதுக்குப் பதில் தெரியாத அளவுக்கு நீங்கள் 'ஸிம்பிள்'னு நான் நினைக்கலே'' என்றாள் பானு.

அவளுடைய பதில் அவன் மனத்தில் ஒருவிதமான உற்சாகத்தையும் திகிலையும் ஒரே சமயத்தில் உண்டுபண்ணியது. சதுரங்கக் காயைப் போட்டாகி விட்டது. அவன் விளையாடித்தானே ஆக வேண்டும்?

''நான் ஒண்ணு உன்னைக் கேட்கலாமா?'' என்றான் அமிர்தம்.

''இதுக்குத்தான் 'விக்டோரியன் அப்ரோச்'ன்னு பேரு...'' என்றாள் பானு.

''எப்படி வேணும்னாலும் இருக்கட்டும். என் வயசு என்னன்னு உனக்குத் தெரியுமா?...''

''இந்தமாதிரி அசட்டுத்தனமான கேள்வியெல்லாம் கேட்க வேண்டாம். ஒருவேளை உங்களைப் பத்தி நான் கொண்டிருக்கிற அபிப்பிராயத்துக்கு இது ஏமாற்றமாக ஆனாலும் ஆகலாம்..''

''அசட்டுத்தனமான கேள்வியா?... உனக்கு உணர்ச்சி வசப்படற வயசு. நான் அதையெல்லாம் தாண்டியாச்சுன்னு சொல்ல வர்றேன்...''

''உணர்ச்சி வசப்படாமெத்தான், இன்னிக்குக் காலம்பற என் ஆபீசுக்கு என்னைத் தேடிண்டு வந்தேளா?—எனக்கு சிரிப்பா யிருக்கிறது, மிஸ்டர் அமிர்தம்!''

சிப்பந்தி கொண்டு வந்த காப்பியை எடுத்துச் சிறிது உறிஞ்சினான் அமிர்தம். அவனுக்குப் பானுவைப் பார்க்கக் கொஞ்சம் பயமாக இருந்தது.

''உனக்கு ஏன் இளைஞர்களைக் கண்டால் பிடிக்கலேன்னு எனக்குப் புரியலே..''

''நீங்க சொன்னமாதிரி அதுக்கு ஒரு வலுவான காரணம் இருக்கலாம்....'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள்.

''மறுபடியும் நான் பல யூகங்கள் செய்ய வேண்டியிருக்கு...''

''வழக்கம்போல எல்லாமே தப்பாத்தான் இருக்கும். உங்கள் முதல் யூகம், யாரோ ஓர் இளைஞன் என்னை ஆசை காட்டி ஏமாத்தியிருக்கலாம்னு இருக்கலாம்...அப்படியிருந்தால் அது அபத்தம்.''

''சரி... நான் ஒரு யூகமும் செய்யப் போறதில்லே. நீயே சொல்லு.''

''இப்போப் போறானே ஒரு பையன் வாலை ஆட்டிண்டு, அவன்மாதிரி மீசை அப்பத்தான் முளைக்க ஆரம்பிச்ச ஒரு விடலைப்பயல் என் அம்மாவுக்குச் சிநேகிதமா யிருந்தான் மெட்ராஸிலே. அந்த முட்டாளோட அப்பாவும் அம்மாவும் என் வீட்டுக்கு வந்து போட்ட கூப்பாடு...! அவாளோட அபிப்பிராயம் என் அம்மா எனக்காகத்தான் அவனை வலை போட்டுப் பிடிக்கறாள்னு... நான் அவங்களை மேலும் அதிர்ச்சிக்கு உள்ளாக்க விரும்பலே!....''

அவள் இதை எந்தவிதமான சங்கோசமும் இல்லாமல் சொன்னாள்.

''நான் இதை இப்படி சர்வ சாதாரணமாச் சொல்றேனேன்னு பார்க்கிறீங்களா? நான் இதைப் பத்தி எண்ணி எண்ணி இதிலே உள்ள அதிர்ச்சியெல்லாம், எனக்கு அர்த்தமற்றுப் போச்சு...''



CCM's

டீ பை டீ
உங்களதே!

# மிர்ராபோ

அழகுக்கு அழகு ஊட்டும் கசங்காத
2 x 2 ஃபுல் வாயில்கள், சாதா,
தளிர்வண்ணம், கெட்டிவண்ணங்களில்
ரவிக்கைத் துணிகள் உள்ளன.

மற்றும் ஸ்டேலாங்கர், ஸ்ட்ரேஞ்சர் பாப்ளின் ஷர்டிங்குகளும் கிடைக்கும்.

**தி கோயம்பத்தூர்**
**காட்டன் மில்ஸ் லிமிடெட்**
கோயம்பத்தூர்







விநியோகிப்பவர்கள்: வெங்கடேஷ் வஸ்திராலயா, கோயம்பத்தூர்-2 & சென்னை-1

அவள் இவ்வாறு கூறிக் கொண்டே மேஜையின் மேல் தண்ணீரிருந்த கண்ணாடித் தம்ளரை இறுகப் பற்றினாள். சிந்தனையில் லயித்த ஒரு வெட்டவெளிப் பார்வை தம்ளரின் மேல் விழுந்தது. தாயாரின் மீது ஆத்திரமா அல்லது இளைஞர்களைக் கண்டால் ஏற்படும் வெறுப்பா, அவள் தம்ளரை அப்படி இறுகப் பற்றுவதற்கு எது காரணம்?—

''என் அம்மாவிடம் இருக்க எனக்குப் பிடிக்கல்லே. நான் அவளை விட்டுப் பிரிய வேண்டும்!''

அப்படியானால் அவள் அம்மாவை விட்டுப் போவதற்குத் தான் ஒரு சாதனமா?—

''என்னாலே உனக்குப் பாதுகாப்பு அளிக்க முடியும்னு நம்பறயா?''

''நான்ஸென்ஸ்... பாதுகாப்பைப் பத்தி நான் கவலைப் படல்லே... ஐ லைக் யூ...''

''ஏன்?''

''ஏன்னு என்னாலே சொல்ல முடியாது. நம்ம இரண்டு பேருக்கும் ஒரு மாதிரியான ரசனை இருக்கிறதும் இதுக்கு ஒரு காரணமாயிருக்கலாம்...''

''பாதுகாப்பைப் பத்திக் கவலைப் படாத முதல் பெண்ணை இப்போத் தான் நான் பார்க்கிறேன். பெண்கள் கல்யாணம் செய்துக்கறதுக்குக் காரணமே இந்தப் பாதுகாப்பு உணர்ச்சி தான்...''

''ஆணை மையமாக வைச்சு இயங்குகிற சமூகத்திலே பெண் பாதுகாப்பைத் தேடறதிலே ஆச்சரியமில்லே... நமது நாட்டுப் பெண்களுக்குக் கணவன்ங்கிற ஸ்தானம்தான் முக்கியம். கணவன் கூட இல்லே... கணவன் உயிரோட இருந்தால் போதும். அவனைக் கூடையிலே வைச்சு இன்னொரு பெண்ணோட வீட்டிலே கொண்டு விடறதுதான் கற்புன்னு நினைக்கிற நாட்டிலே வேறே எதை எதிர்பார்க்க முடியும்?...''

''அப்படின்னா மத்தவங்க மாதிரி இல்லாமெ ஒரு தனி இனுசா இருக்கணுங்கறதுதான் உன் விருப்பமா? தனி இனுசா இருக்கணும்கிற ஒரே காரணத்துக்காக என் நட்பை எதிர் பார்க்கிறியா?''

பானு அவனுக்கு உடனே பதில் சொல்லவில்லை. அவனைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டே யிருந்தாள்.

''ஏன் இப்படிப் பார்க்கிறே?''

அவள் முகத்திலே ஒரு புன்னகை. அதில் ஏளனத்தின் சாயை நிழலிட்டது.

''எதுக்கும் ஒரு காரணம் இருக்கணும்னு நீங்க ஏன் நினைக்கிறீங்க? உங்க பேரிலேயே உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?''

அமிர்தம் சற்றுத் திடுக்கிட்டான். பல வருஷங்களுக்கு முன்னால் நித்யா இதையேதான் சொன்னாள். பானு கொஞ்சம் நாகரிகப் பூச்சுடன் கூறியதை அவள் வெளிப்படையாகவே கேட்டாள்: ''உங்களுக்கு ஏன் இவ்வளவு தாழ்வு மனப்பான்மை?......''

தனக்குத் தாழ்வு மனப்பான்மை இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. நித்யாவின் உற்சாகத்துக்கு ஈடு கொடுக்க முடியாத தன்னுடைய ஒதுங்கிய சுபாவத்தின் காரணமாக அப்பொழுது தனக்குத் தாழ்வு மனப்பான்மை என்று சொல்வதற்கு இடமிருந்தது. ஆனால் இப்பொழுது!— வயது என்று சொல்ல முடியுமா? — மேல்நாடுகளில் ஒருவனுக்கு வாழ்க்கையே நாற்பது வயதில் தான் தொடங்குகிறது என்கிறார்கள். ஆனால் நம் நாட்டில்? — சே!... இதைப் பற்றி யெல்லாம் எண்ணுவதற்கும் வயதே காரணம்!

''ஏதாவது தப்பாச் சொல்லி யிருந்தால் மன்னிச்சுக்குங்க!...'' என்றாள் பானு.

''இல்லே, இல்லே! 'உங்க பேரிலேயே உங்களுக்கு நம்பிக்கை இல்லையா'ன்னு கேட்டியே, அதைப் பத்தி யோசிச்சுக்கிட்டு இருந்தேன்...''

''யோசிக்கிறேன்னு என்ன அர்த்தம்? யோசிக்கிறதுக்கு நிறைய விஷயம் இருக்கா?...''

''நான் உன்னைப் பத்திக் கேட்டேனே தவிர, நீ இன்னும் என்னைப் பத்தி எதுவும் தெரிஞ்சுக்கலே, இல்லையா?''

பானு தோள்களைக் குலுக்கிக்கொண்டாள். 'எனக்கு அதைப் பத்தி அக்கறை இல்லை' என்று சொல்வது மாதிரி இருந்தது.

''உனக்குக் கேட்க விருப்பம் இல்லேன்னு நான் சொல்லலே...''

''நடக்கிற விஷயத்தை அப்படியே பார்க்கிறதை விட்டுட்டு இதுக்கு முந்தி என்ன, பிந்தி என்னன்னு பார்க்கிற விஷயமே எனக்குப் பிடிக்காது...''

''உன் பேரிலேயே உனக்குப் பிடிவாதமான நம்பிக்கை இருக்குன்னு நினைக்கிறேன்....''

பானு புன்னகை செய்தாள். அது அவன் சொல்வதை ஆமோதிப்பது போலிருந்தது.

அப்பொழுது ஓர் இளைஞன் பக்கத்து சோபாவில் வந்து உட்கார்ந்தான். ஆறடி உயரம். முகத்தில் ஓர் அலட்சியமும் மிடுக்கும் வெளிப்படையாகத் தெரிந்தன. வழக்கமாக எல்லோரும் செய்வதைப் போல அவன் சுற்றுப்

# அழகி எங்கே?



மண்ணின் மாண்பு

இல்லினாய்ஸில் வாழ்ந்து மடிந்த ஒரு மனிதர் சொர்க்கத்தின் வாசலில் போய் நின்று கதவைத் தட்டினார். பூஜ்யர் பீட்டர் கதவைத் திறந்து வெளியே வந்து, "நீ எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டார்.

"சாலமன் கௌண்டி, இல்லினாய்ஸ்!" என்று பதிலளித்தார் அந்த மனிதர்.

"திரும்பிப் போ! இல்லினாய்ஸ், சாலமன் கௌண்டியைப் போல் இங்கே அழகான இடமில்லை!" என்றார் பூஜ்யர் பீட்டர். - அமெரிக்க நாடோடிக் கதை.

- பி. எஸ். மணி.

---

புறத்தை ஆராயும் நோக்கத்துடன் பார்க்கவில்லை. கையில் சில ஆங்கிலப் பத்திரிகைகள் வைத்திருந்தான். அவற்றைப் புரட்டத் தொடங்கினான்.

அவன் வந்து உட்கார்ந்ததும் அவன் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவனையே தொடர்ந்து சில விநாடிகள் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அப்படிப் பார்க்க வேண்டிய முகந்தான் அது. தன் தலையிலிருந்து ஓரிரண்டு நரை மயிர்கள் எட்டிப் பார்ப்பன போல் பட்டது அமிர்தத்துக்கு.

அமிர்தம் தன்னைக் கவனிக்கின்றான் என்பதை உணர்ந்த பானு, அவ்விளைஞன் கையில் வைத்துக் கொண்டிருந்த பத்திரிகைகளை நோக்கியவாறு சொன்னாள்: "படிக்கிறதுக்காக நல்ல இடம் தேடியிருக்கான்...."

பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் நித்யா சொன்னாள்: "கல்யாணமாகாத ஆம்பிளை தனியாப் போறதும், கல்யாணமாகாத பொண்ணு இன்னொருத்தரோட போறதும் யோசிக்க வேண்டிய விஷயங்கள்...." இந்த இளைஞனுக்குக் கல்யாணம் ஆகியிருக்குமா? ஆகவில்லையென்றால், யோசிக்க வேண்டிய விஷயந்தான்!

"அவன் தனியா உட்கார்ந்துக்கிட்டிருக்கிறது எனக்கென்னமோ கஷ்டமா இருக்குது...." என்றான் அமிர்தம்.

"நான் போய் வேணா உட்காரட்டுமா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் பானு.

"அப்படியே செய். ஒரு வேளை அதுதான் பொருத்தமாயிருக்கலாம்...."

பானு இலேசாகத் தலையை ஆட்டினாள். திடீரென்று அமிர்தத்தின் கையை எடுத்துத் தன் கையோடு சேர்த்து வைத்துக் கொண்டாள். பிறகு சொன்னாள்:

"உங்களுக்கு இந்த வயசு ஞாபகம் ஒரு 'அப்ஸெஷனா'யிடுத்துன்னு நினைக்கிறேன்....."

முகத்தில் அறைந்தாற்போல் இருந்தது. அமிர்தம் வேறு பக்கம் திரும்பிச் சுவர்ப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான். பானுவின் ஸ்பரிசத்தால் ஏற்பட்ட, அலை அலையாய்ப் பரவிய இன்ப உணர்வு, அவள் சொன்ன வார்த்தைகளால் தாக்குண்டு சிதறியது. அமிர்தம் நிலைகொள்ளாமல் தவித்தான். வாஸ்தவம்தான், இந்த 'அப்ஸெஷன்'தான் குறுக்குச் சுவராக எழுந்து மனச்சாட்சி அது இது என்று மாறு வேஷம் கொண்டு அவனைப் பலஹீனமானவனாக்கி விடுகிறது..... பக்கத்தில் வந்து உட்கார்ந்த அவ்விளைஞனைப் பார்த்ததால் ஏற்பட்ட பலஹீனம். இந்த ஒப்பிட்டு நோக்கும் மனப்பான்மைக்கு, பானு கூறுவது போல், தன்னம்பிக்கையின்மைதான் காரணமாக இருக்க வேண்டும்....

பானு வைத்துக் கொண்டிருந்த கையை அவன் இலேசாக அழுத்தினான். அவள் முகத்தில் சற்று வியப்புக் குறியுடன் அவனை நோக்கினாள். அவள் முகத்தில் தோற்றுவித்த வியப்புக் குறி அவனுக்கு ஒரு புதிய சோபையைத் தந்தது. இதையெல்லாம் உணர முடிகிற போது, தனக்கு வயதாகிவிட்டது என்று ஏன் நினைக்க வேண்டும்? அவள் முகத்தில் தெரிந்த ஆச்சரியம் மறைந்து கன்னத்தில் சிவப்பு கண்டது. விரல்களோடு அவள் கையைச் சேர்த்துப் பற்றிக் கொண்டான் அமிர்தம்.

"உங்களுக்கு நான் சொன்ன மாதிரி அப்படியொண்ணும் 'அப்ஸெஷன்' இல்லேன்னு காட்ட இவ்வளவு ஆத்திரமா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் பானு.

அமிர்தம் தன் கைகளை விடுவித்துக் கொண்டே வினவினான்: "சரி, போகலாமா?"

"பில்?" என்றாள் பானு.



# இவற்றைச் சிலுவையில் அறையாதீர்கள்!

**ஆர்வம் மிக்க இந்தக் கரங்கள்தான் இந்திய பருத்தி சாகுபடியாளர்கட்கு விற்பனையில் மிக அதிகமான பாகத்தைச் சம்பாதிக்க உதவ வல்லவை.**

**உதவியாளர்கள்:** பருத்தி சாகுபடியாளருக்கு, உலகிலேயே மிகத் திறமைவாய்ந்த பருத்தி விற்பனை முறையை வழங்கும், இந்தியாவின் பருத்தி வியாபாரிகள்.

**அவர்களுடைய குறிக்கோள்:** பயிர் கஷ்டமானாலும், சாகுபடியாளருக்கு உத்திரவாதமான விலை கிடைப்பதை உறுதி செய்தல். அவருக்கு தொழில்நுட்ப உதவியும், நிதி உதவியும், வழங்குதல். சாகுபடியாளருக்கு, விற்பனையில் உலகிலேயே மிக அதிகமான பாகம் கிடைப்பதை உறுதி செய்தல். இதில் பருத்தி வியாபாரிக்குக் கிடைக்கும் கிரய லாபமான 1% உலகிலேயே மிகக் குறைவானது.

**லாப விழுங்கிகள்:** பருத்தி வியாபாரத்தை அரசாங்கம் ஏற்று நடத்தும் பிரேரணை.

**ஆபத்து:** தொழில் அனுபவம் அற்றவர்களால் நிர்வாகம். நிதி வசதிகளில் நெருக்கடி நிலைமை ஏற்பட்டு, சாகுபடியாளர்கள் வேறு ரொக்கப் பயிர்களை நாடுதல். திறமையுடன் தரம்பிரித்த பருத்தி சப்ளைகளில் தீவிரமான பற்றாக்குறை ஏற்படுதல். ஏறுமுகமான விலைகள். ஏற்றுமதி வாணிபத்தின் அழிவு.

**இதற்குப் பலி:** இன்று, பஞ்சாலைகள். நாளை, இதர வியாபாரங்கள். கடைசியில், நாடு.

**பாதுகாப்பு:** பருத்தி வியாபாரம் மட்டுமின்றி, பருத்தி, உணவுதானியங்கள், எண்ணெய் விதைகள் ஆகிய விவசாயப் பொருள்களின் விநியோகத்தில் ஈடுபட்டுள்ள வாணிபத்துறை முழுவதுமே நாசமாக்கப்பட இருக்கிறது. இது ஜனத்தொகையின் கணிசமான பாகமாகும்—குடும்பத்தினர் உள்பட 6½ கோடி வோட்டு பலம் கொண்ட பாகம் இது!

பிரேரேபிக்கப்பட்டுள்ள ஆல் இந்தியா காட்டன் ஃபெடரேஷனின் அட்ஹாக் கமிட்டி. ஜனநாயகமான வியாபாரத்தின் பாதுகாப்பாளர்களுடன் சேருங்கள். ஏற்கெனவே 6½ கோடி வோட்டு பலம் உள்ளது!

அமிர்தம் விரலைச் சொடுக்கிச் சிப்பந்தியைக் கூப்பிட்டான். ஒரு தட்டில் 'பில்'லைக் கொண்டு வந்து அவன் வைத்ததும் அதில் பணத்தைப் போட்டு விட்டு அமிர்தம் எழுந்தான்.

இருவரும் மௌனமாக வெளியே வந்தார்கள்.

''மணி எட்டாகிறது....'' என்றாள் பானு வீதிக்கு வந்தவுடன்.

''வீட்டுக்குப் போக ரொம்ப நேரமாயிடுச்சு, இல்லே?'' என்றான் அமிர்தம்.

அவள் பதில் சொல்லவில்லை.

கார் லட்சுமிபாய் நகர் செல்லும் வரையிலும் அவன் பேசவில்லை.

அவள் வீட்டருகே சென்றதும், பானு சொன்னாள்:

''ரொம்ப நாளைக்கு அப்புறம் இன்னிக்குத்தான் சந்தோஷமா இருக்கேன், உங்களுக்குக் காரணம் தெரியும்...''

''இலேசிலே தீர்மானம் செய்யாதவ நீ, ரொம்ப சீக்கிரம் முடிவு செய்திட்டே போலிருக்கே....''

''ஆமாம்.... இதுவே உங்களுக்கு எச்சரிக்கைகூட....''

''எச்சரிக்கையா ?''

''ஆமாம்... இந்த முடிவு செய்ய உற்சாகப்படுத்தியவரே நீங்கதான்..... இதனாலே உங்க பொறுப்பும் அதிகமாகிறது.''

அவள் குரலில் கண்ட நிதானமும், எஃகைப் போன்ற உறுதியும் அவனுக்குச் சிறிது அச்சத்தைத் தந்தன.

''சரி !... நான் வரட்டுமா...? அப்புறம் எப்போ பார்க்கிறது?'' என்று கேட்டுக் கொண்டே 'ஸ்டியரிங்'கிலிருந்து அவன் கையை எடுத்துக் குலுக்கினாள் பானு.

அமிர்தம் பேசாமல் இருந்தான்.

''நாளைக்குப் பார்க்கலாமா?'' என்று வினவியவாறு அவள் காரிலிருந்து இறங்கினாள்.

''நாளைக்கா !''

''ஏன், என்ன தயக்கம் ?''

''சரி..... எங்கே பார்க்கலாம்....?''

''நாளைக்கு வேறே எங்கேயாவது போவோம்.... இந்தியா கேட் ?''

''நாளைக்கு வேண்டாமே.... ஞாயிற்றுக்கிழமை பார்க்கலாமே?....''

பானு அவனைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தாள். பிறகு கேட்டாள்: ''என்னைக் கண்டால் பயமாயிருக்கா?''

''என்ன சொல்லறே நீ?... எதுக்காக உன்னைக் கண்டு பயப்படணும்? தினம் பார்க்கணுமான்னு யோசிச்சேன். அடிக்கடி சந்திக்கும் அளவுக்கு நான் ஒண்ணும் அப்படி சுவாரஸ்யமான மனுஷன் இல்லே!''

பானு புன்னகை செய்தாள். ''இன்னும் கொஞ்ச நாட்கள் என்னோட பழகினீங்கன்னு உங்களுக்குத் தன்னம்பிக்கை வந்துடும்னு நினைக்கிறேன்.... நாளைக்கே பார்ப்போம்.... ஆகாஷ்வாணிக்கு அஞ்சு மணிக்கு வாங்க.... டாடா, பை பை.''

அவள் போய் விட்டாள்.

அவன் வீட்டுக்குச் சென்ற போது வாசற் கதவு திறந்திருந்தது. இதை அவன் எதிர்பார்க்கவில்லை. ஹாலில் திலகம் சோபாவில் உட்கார்ந்தவாறு ஏதோ ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். அவள் திலகந்தானா என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டது..... இரண்டு மூன்று தடவை உற்றுப் பார்த்தான். அவள் அப்படித் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். உடம்போடு இணைந்த புடவை. முகத்துக்கேற்ற அளவான கொண்டை. அவள் தேர்ந்தெடுத்திருக்கும் புடவையின் நிறமும், உடுத்தியிருந்த பாணியும், அவளுடைய சற்றுப் பருமனான உடம்

யைக் கொஞ்சம் இளைத்தாற்போல் காட்டின. அவனுக்கு உடை அலங்காரத்தில் யாரோ யோசனை கூறியிருக்க வேண்டுமென்று அவனுக்குப் பட்டது.

அவனைப் பார்த்ததும் திலகம் புன்னகை செய்தவாறே எழுந்திருந்தாள்.

'' ஏன் இந்நேரம் ?''

''நேரம் கிடக்கட்டும்.... இன்னிக்கு என்ன அலங்காரம் இவ்வளவு பிரமாதமா இருக்கு?....''

''சும்மாத்தான்.... நீங்க வீட்டுக்கு வரப்போ அழுது வடிஞ்சுகிட்டு இருக்கச் சொல்றீங்களா?....''

''இந்த மாதிரி....'' ஏதோ கேட்க நினைத்தவன், சொல்ல வந்ததை முடிக்காமல், சோபாவில் உட்கார்ந்தான்.

''இந்த மாதிரி... என்ன சொல்ல வந்தீங்க, சொல்லுங்க....''

''அலங்காரம் செய்துக்க யார் உனக்குச் சொல்லிக் கொடுத்தாங்க?''

'' என்ன நினைச்சுக்கிட்டு இப்படிக் கேக்கறீங்க?.... நான் வெறும் பட்டிக்காடுன்னு அர்த்தமா?....''

''இல்லே.... வந்து.... நீ இதுவரையில் இப்படி அலங்காரம் செய்துக்கிட்டதில்லையேன்னு கேட்டேன்....''

'' நீங்களும் இப்படிக் கண்டவளோட சுத்திக்கிட்டு இருந்ததில்லையே, இப்பொத்தானே ஆரம்பிச்சிருக்கீங்க.''

'ஷு'வைக் கழற்றிக் கொண்டிருந்த அமிர்தம் திடுக்கிட்டு அவளை ஏறிட்டு நோக்கினான்.

'' என்ன சொல்றே நீ ?''

'' நீங்க செய்யறது ஒவ்வொண்ணும் எனக்குத் தெரியாமெ இருக்காது. நினைவு வைச்சுக்குங்க... அது கிடக்கட்டும், இதுக்குப் பதில் சொல்லுங்க, ஏன் உங்க புத்தி இப்படிப் பேதலிச்சுப் போகணும்....?''

இவளுக்கு எப்படித் தெரிய வந்தது? யார் சொல்லியிருப்பார்கள் ? தெரிந்தவர்கள் யார் கண்ணிலும் படவில்லையே..... அப்படிப் பட்டிருந்தாலும், திலகத்துக்குச் சொல்லும்படி யாருக்கு இவ்வளவு அக்கறை ?....

திலகம் அவன் அருகில் வந்து உட்கார்ந்தாள். ''என்கிட்டே என்ன குறை சொல்லுங்க.... நான் கறுப்பா இருக்கேன்னு, இல்லாட்டி உங்களுக்குச் சமதையா பேசத் தெரியலேன்னு....? நான் என்ன செய்வேன், என்னாலே இப்படித்தானே இருக்க முடியும்?''

அமிர்தம் சோபாவை விட்டு எழுந்திருந்தான். '1984' என்ற புஸ்தகத்தில் வருவது போல், 'பிக் ப்ரதர் கஸ் வாட்சிங்' என்றாகி விட்டது... தன்னைப் பற்றி உளவறியத் திலகம் தில்லி முழுவதும் ஆட்களை வைத்திருப்பாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அவளுக்கு அவ்வளவு சாமர்த்தியமும் கிடையாது.

அவன் தன் அறைக்குச் சென்று உடையை மாற்றிக் கொண்டான். திலகம் இதை ஏன் ஒரு தற்காப்புப் போராட்டமாக நினைக்க வேண்டும் ? பார்க்கப் போனால், அவள் இதை வேறு எவ்விதமாக நினைக்க முடியும் ? உள்ளத்தின் அடித்தளத்தில், கண் மூடி, ஒடி விளையாடிக் கொண்டிருந்த உணர்ச்சிகள் இன்று சாயந்திரம் வெளிப்பட்டு விட்டன. பானுவும் தன் எண்ணத்தை மூடி மறைத்துச் சொல்லவில்லை.... எதிர்காலத்தைப் பற்றித் தனக்குள்ள திட்டந்தான் என்ன? பானுவிடம் இதைப் பற்றி விவாதித்தாக வேண்டும்.

அமைதியாகச் சென்று கொண்டிருந்த வாழ்க்கையில் சலனத்தை ஏற்படுத்திக் கொள்வது விவேகந்தானா? அது சமாதியின் அமைதியோ, எது வேண்டுமானாலும் இருக்கட்டும், பிரச்னைகளை உண்டாக்கிக் கொண்டு அவற்றை எதிர்நோக்கக்கூடிய துணிவு தன்னிடம் இருக்கிறதா?-அன்று நித்யா தன்னைக் கோழை என்று நேரடியாகக் கூறாமல், பல வார்த்தைகளில் சொன்னாள். இன்று பானு தனக்குத் தன்னம்பிக்கையில்லையே என்று ஏளனம் செய்கிறாள்... ஹாம்லெட் சொன்னது போல் மனச்சாட்சி தன்னைக் கோழையாக்கி விட்டதா?

அமிர்தம் அறையிலிருந்து திரும்பி வந்த போது திலகம் 'டைனிங் டேபிளி'ல் அவன் தட்டைப் போட்டுக் கொண்டிருந்தாள்.

''சாப்பாடு வேண்டாம், பசிக்கலே.''

அவள் திரும்பிப் பார்த்தாள்.

''ஏன்?'' — குரலில் அழுத்தத்துடன் அவள் இக்கேள்வியைக் கேட்டாள்.

அவன் பதில் கூறவில்லை. சோபாவில் உட்கார்ந்தான்.

''யார் சொன்னாங்க?....'' அவன் காலை எதிர்த்தாற் போலிருந்த 'டீபாயில்' போட்டுக் கொண்டே கேட்டான்.

''என்னது, யார் சொன்னாங்க?....''

''அதான்... இன்னிக்குச் சாயந்திரம் நடந்ததெல்லாம்....''

'' யார் சொன்னா என்ன, அதா முக்கியம்....?''

''ஒரு பெண்ணோடே சாதாரணமாப் பேசறதைக் கண்டபடி திரிச்சு ஒருத்தர் சொன்னா, யார் அப்படிச் சொன்னாங்கன்னு கேக்கறது முக்கியமில்லையா...?'' என்று கேட்டான் அமிர்தம். (தொடரும்)



# வாத்தியாரை எதிர்த்தவன்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

**ப**ள்ளிக்கூடத்தை விட்டுக் கிளம்பி விட்டான் பாலு. மிட்டாய்க் கடைகளையும், பலூன்காரனையும், ஐஸ் வண்டியையும் நிமிர்ந்து பார்க்கவே மனத்தில் தெம்பில்லை. வழக்கமாக முகத்தில் தெரியும் புன்னகை மிரண்டு ஓடிவிட்டது. ஒரு சோகக் களை பாசி மாதிரி அந்த இடத்தை அடைத்துக் கொண்டிருந்தது.

மழைக் குருவியைப் போலத் தலையைக் குனிந்து கொண்டு மேலே நடந்தான். தலைமை ஆசிரியர் கண்ணின் கோபச் சிவப்பு, இன்னும் மனத்தில் தெரிந்தது. அவருக்கு ஏன் அவ்வளவு கோபம், அவன் புது ஆசிரியரிடம் குறும்பு செய்ததற்கு?

புது ஆசிரியர் எல்லோரையும் அவரவர் எண் வரிசைப்படி உட்காரச் சொன்னது மெய்தான். ஆனால் யாருமே அப்படி உட்காரவில்லை. ஆனால் அவனிடம் மட்டும்தான் வந்து நின்றார் அவர். சிறு பையன், எளிதாக மிரட்டி விடலாம் என்று நினைத்தார் போல் இருக்கிறது. பக்கத்தில் இருந்த பையன்கள் கொடுத்த தூண்டுதலில் துணிச்சல் மூங்கில் வீம்பாய் நிமிர்ந்து விட்டது.

அடிக்க ஓங்கிய அவர் கையைப் பிடித்துக் கொண்டு விட்டான். பதிலுக்குப் பதில் பேச்சும் மாறி விட்டது. புது ஆசிரியர் அகஸ்டின் 'விருட்'டென்று திரும்பிப் போய் விட்டார்; அவன் தன் இடத்தில் உட்கார்ந்து விட்டான். கடைசி வரிசைப் பையன்களிடமிருந்து கைதட்டல்; அவன் துணிச்சலைப் பாராட்டுவது போல.

பிற்பகல் டிபன்பாக்ஸைப் பிரித்து, அம்மா நாலெட்டாய் மடித்து வைத்திருந்த இரண்டு தோசைகளையும் துவையலையும், சாப்பிடத் தொடங்கிய நேரம். பியூன் பெரியசாமி வந்து விட்டான்.

"உன்னை ஹெட்மாஸ்டர் வரச் சொன்னாரு!"

கையில் எடுத்தது வாய் வரைக்கும் போகவில்லை. அவனுக்கே என்ன தோன்றிற்றோ, என்னவோ? "சும்மா நிதானமாப் போ கொழந்தை. அவசரம் ஒண்ணுமில்லே. மெதுவா சாப்பிடு மொதல்லே" என்று வாய் வெற்றிலைக் காவி தெரியச் சிரித்துக்கொண்டே சொன்னான் பெரியசாமி.

மளமளவென்று சிற்றுண்டியை முடித்துக் கொண்டு குழாயடிக்கு ஓடினான்.

தலைமை ஆசிரியர் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். பசும் பொன் நிறம். சதுர வாகான முகத்தில் அடையாளம் கண்டுபிடிக்க முடியாத ஓர் இறுகிய உணர்ச்சி.

வாசலில் நிழல் தட்டியதும் அவர் முகம் நிமிர்ந்தார். அவனுக்கு அந்தப் பார்வையிலேயே வயிற்றில் சில்லிப்பு துண்டமிட்டது. பெரிய கோபுரத்தின் அடியில் நிற்பவனைப் போலச் சிறுமைப்பட்டுக் கூசினான். உடலில் ஒரு சிலிர்ப்பு ஊர்ந்தது.

"வா, இங்கே...."

"........."

"உங்க அப்பாவே என்னிடம் படிச்சவன். அவன்கிட்டே சொல்றேன், நீ செய்ததை. வயசு இன்னும் பத்து முடியவில்லை. அதுக்குள்ளே முற்றிவிட்ட நினைப்பா உனக்கு?"

தார்க்குச்சி ஏறித் தலை தெறிக்க ஓடுற மாடு, கடைசியில் ஒரு நிலையில் வலி தாளாமல் பொட்டலமாக அப்படியே சரிந்து உட்காருவதைப் போல், அவன் மனம் அந்தக் கடைசிச் சொற்களில் அயர்ந்து அமர்ந்து விட்டது. அந்தக் கனத்தைத் தூக்கி இழுக்க முடியாமல் தள்ளாடிக் கொண்டே, தலையைக் குனிந்து கொண்டே தன் வகுப்பு அறைக்கு வந்தான்.

இதோ வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறான்.

**வா**சலில் அம்மா நின்று கொண்டிருந்தாள். கடைக்காரனிடம் மல்லிகைச்சரத்தை முழம் அளந்து வாங்கியபடி நின்றவளின் முகம் அவனைக் கண்டதும் வியப்பும் பூரிப்புமாக ஒரு கணம் மலர்ந்து அடங்கிக் கொண்டது.

அன்று சிற்றுண்டி இல்லை. அம்மா மாம்பழத் துண்டங்களைத்தான் நறுக்கி வைத்திருந்தாள். வழக்கப்படி இருந்திருந்தால் அவன் அதற்காகச் சண்டை பிடித்திருப்பான். அன்று மனம் எதிலும் பிடி கொடுக்கவில்லை. ஏரித் தண்ணீர் மீது தவளைக் கல் வீசியது போல, எல்லாவற்றிலும் தொட்டும் தொடாமலும் தாவிக் கொண்டே போயிற்று.

"என்ன? ராஜாவுக்கு இன்றைக்கு முகத்தில் சுரத்தையே காணோம்?" கையில் பால் தம்ளரைக் கொடுத்தபடி அம்மா கேட்டபோது மனத்தில் ஓர் இருள் எழுந்து விம்மிற்று. கண்கள் சட்டென்று பளபளத்தன.

"எதுக்குடா அழுகை?"

அம்மா அவனைத் தன்புறமாக இழுத்து அணைத்துக் கொண்டாள். பொங்கி வந்த அந்தப் பரிவில் அவன் 'பொட்'டென்று உடைந்து போனான். விக்கலும் குரலுமாகப் பேச்சுத் தடுமாறியபடி வந்தது. தன் பேரில் குற்றம் எதுவுமே இல்லாதது போல், அவ்வளவும் ஆசிரியரின் தப்புப் போல, ஜோடனை செய்து சொல்வது எளிதாக இல்லை. இரண்டு நிமிடங்களில் சொல்லியிருக்கக்கூடிய செய்தி பத்து நிமிடங்களாக ஊர்ந்தது.

அவன் எதிர்பார்த்தபடிதான் விளைவு இருந்தது. அம்மா அவன் கட்சிதான். உலகமே எதிர்த்து வந்தால்கூட, இறக்கையை விரித்துக் கோழிக் குஞ்சை அணைக்கும் தாய்ப் பறவை

யைப் போல் அம்மா அவனைக் காத்து விடுவாள். அவனுக்குத் தெரியும். ஆனால் அவன் அஞ்சியது அவள் அவனுக்காக அப்பாவிடம் பரிந்து பேசப் போவதையும், பதிலுக்குச் சீறித் தெறிக்கும் அப்பாவின் கோபத்தையும் தான்.

"அப்பாகிட்டே நீ சொல்லுவியாம்மா ?"

'களுக்'கென்று நீரில் கல்லெறிந்தது போல் சிரித்துக் கொண்டாள் அம்மா. அந்தச் சிரிப்பு அவனுக்கே தனி.

"சரி. சரி. நீ போய் விளையாடு. நான் பார்த்துக்கறேன்."

பாலுவின் தகப்பனார் ராஜு கண்டிப்பு மிகுந்தவர். இளம் வயதிலேயே சற்று உயர்ந்த பதவிக்கு வந்துவிட்டவர். அதனால் அலுவலகத்தில் எல்லோரையும் ஆட்டி வைத்து அவருக்கு வழக்கமாகி விட்டது. வீட்டிலும் அதே கெடுபிடிதான். மனைவி இந்துவிடம் மட்டும் சற்று மென்மையாக அவர் குரல் இறங்கி வரும். அவனிடம் எப்போதும் அவருக்கு இலேசான கடுகடுப்புத் தான். அவர் கோபித்துக் கொண்டால், அவனுக்குச் சொல்ல வந்ததும்கூட மறந்து போகும்; பரீட்சைத் தாளைக் கண்டதும் நினைவிலிருந்து நழுவி ஓடுகிற பழைய பாடத்தைப் போல.

விளையாட்டு முடிந்து, கால் கைகளைக் கழுவிக்கொண்டு உள்ளே வந்தபோது, மாலை நேரத்து உணர்ச்சிகள் சற்றே வடிந்து, எல்லாவற்றையும் கழுவி விட்டது போலத் தோன்றியது...

அப்பா வந்து விட்டார். எதிர்பார்த்தது போல அவருடைய குரல் எழும்பவில்லை. ஒரு வேளை அவருக்கு இன்னும் தெரியாதோ என்னவோ? எல்லாம் தெரிந்து, புயல் வீசிச் சட்டென்று ஓய்ந்து அடங்கி விட்டால் தேவலை போல இருந்தது. அவர் உடைகளை மாற்றிக் கொண்டு, சாப்பிட்டு முன் வாயிலுக்கு வரும்வரை அந்தப் பேச்சு ஏனோ எழவே யில்லை.

அந்த மௌனமே 'கல்' என்று அவன் மனத்தில் கனமாக இறங்கி யிருந்தது.

"இன்றைக்கு என்ன நடந்தது, பள்ளியில்?" அப்பாவின் குரல் தாழ்ந்து குழறும் கனத்துடன் இறங்கியதும், அவன் மனத்தில் திடீரென்று அச்சம் கரந்தது.

அம்மாவின் குரல் அப்போது சற்று உயர்ந்து அவர் குரலைத் தடுத்தது. "இல்லே. இல்லே. நானே உங்களிடம் சொல்லத்தான் இருந்தேன். குழந்தை மேல் தப்பு ஒன்று மில்லே."

"நீ சும்மா இரு, இந்து. வாத்தியாரை எதிர்த்துப் பேசி இன்டல் பண்ணி யிருக்கான் இவன். இதைச் சும்மா விடக்கூடாது." அவருடைய குரல் அவன்புறமாக நெருங்கி வந்தது. அவன் எழுந்து நின்றான், ஓடுவதற்குத் தயாராய். அதற்குள் அவர் அவன் சட்டையைப் பிடித்துக் கொண்டு விட்டார்.

"குழந்தையை ஒன்றும் செய்யாதீர்கள்!" அம்மாவின் குரல் கெஞ்சியபோது அவனுக்குத் தொண்டையை அடைத்தது. உதடுகள் அதிகம் அசையாது அவர் முகக் கடுகடுப்பில் கோபம் விறுவிறுப்பாய்த் தெரிந்தது.

"உன் தலைமை ஆசிரியர் — எனக்கு வாத்தியார் — அவரே என்னிடம் வந்து, "உன் பிள்ளை இப்படி நடந்துக்கறானே? நீ கண்டிக்கிறது இல்லியா ?' என்று கேட்கிற அளவுக்குக் குறும்பு செய்கிற மாதிரி உனக்குத் தைரியம் வந்து விட்டதா ?"



முதுகில் அடி ஒன்று விழுந்தது. அவன் முகம் நசுங்கலைக் கண்டு குரல் எழும்புமுன் இன்னொன்று. அவன் அழுகைச் சத்தத்தை அமர்த்துவது போல மேலே ஒன்று. பாலு நழுவி ஓடினான். அப்பா தொடர்ந்து வந்தார். அம்மா தொடர்ந்து வந்து அவரைப் பிடித்துக் கொண்டாள்.

"ஒன்றும் செய்யாதீர்கள். போதும். நான் சொல்வதைக் கேளுங்கள்."

அம்மாவின் குரல் நடுங்கிற்று. காற்றில் அலையும் சருகைப் போல அவள் உடம்பு அந்த உட்புயலில் குலுங்கிற்று.

"நீ சும்மா இரு. குழந்தைகளைக் கண்டித்து வளர்த்தால்தான் உருப்படும். இந்த வீட்டில் நீ செல்லம் கொடுத்து அவன் கெட்டுப் போவது போதும். நானும் சேர்ந்து அவனைக் கெடுக்க வேண்டாம்."

மேலும் ஓர் அடி கொடுத்து அவனை வாசலுக்குத் துரத்தி விட்டுத்தான் உள்ளே வந்தார் அப்பா. சாய்வு நாற்காலியில் படுத்துக் கொள்வதும், மேல் துண்டை எடுத்து நெற்றியை ஒற்றிக் கொள்வதும், மறுபடியும் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொள்வதுமாகப் பத்து நிமிடங்கள் ஊர்ந்துதான் கோபம் அடங்க வேண்டியிருந்தது.

வாசலில் அழுகை ஓய்ந்து, குரல் நடுக்கமும் விசிப்புமாக ஒடுங்கி, அமைதி வந்துவிட்டது அந்தப் பத்து நிமிடங்களில். பாலுவை இடையைச் சுற்றி அணைத்த கைகளோடு சேர்த்துக் கொண்டு இந்து அறைக்குள் போனாள். வாசலைத் தாண்டும் போது புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டது உள்வெளிச்சத்தில் நிழல் வடிவமாகத் தெரிந்தது.

மனத்துக்குள் ஏதோ இளைப் புரண்டது போல ஒருகணம் தோன்றிற்று. ராஜுவின் இளகிய மனம் மறுபடியும் இறுகி அந்த நேரத்து நிகழ்ச்சிகளை மறக்க முற்பட்டது.

அறைக்குள் அரை மணி நேரம் கழித்து ராஜு போன போது, இந்து உட்கார்ந்து பாலுவின் தலைமயிரைத் தடவிக் கொண்டிருந்தாள். இன்னும் பாலுவின் கன்னங்களில் கண்ணீர்க் கறை காயவில்லை. அந்தத் தூக்கத்திலும் விசிப்பில் உதடுகள் பொரிந்தவண்ணம் இருந்தன.

"இந்து"—"வேறு ஏதோ பேசத் தொடங்கினான் ராஜு, படுக்கையில் அமர்ந்து தலையணையை இழுத்தபடி. இந்துவிடமிருந்து பதில் இல்லை. அவன் கோபத்தைப் புரிந்து கொண்டவளைப் போலக் கண்கள் ஓர் ஆவலில் மினுமினுக்க, எழுந்து சென்று அவள் புஜத்தைப் பற்றி இலேசாக அழுத்தினான்.

"தூ" என்று இந்து முகத்தைத் திருப்பிக் கொண்டாள். "நான்தான் வேண்டியது இல்லியே உங்களுக்கு."

ராஜு திரும்பி வந்து படுக்கையில் உட்கார்ந்து கொண்டான். சற்றுமுன்னால் அவனை அடித்து அவன் கோபம் அடங்கவில்லை. இப்போது அவள் சொல்லி அவனுடைய கோபம் அடங்காது.

தலையணையை மார்பின் மேல் வைத்துக் கைகளை இறுகக் கட்டிக் கொண்டு தூங்கிப் போன பாவனையாகக் கண்களை மூடினான். கதவுக்கப்பால் கடிகாரம் காறிக் கொண்டு பத்து அடித்து ஓய்ந்தது. இந்து எழுந்து வரவில்லை. அப்படியே பாலுவை அணைத்தபடி உறங்கிப் போனாள்.

இரண்டு மாதங்கள் ஆகியிருக்கும்.

இரவு மணி எட்டு. வழக்கமாக ஆறரைக்கெல்லாம் வீடு திரும்பி விடும் ராஜு அன்று அவ்வளவு நேரமாகியும் வீடு திரும்பவில்லை. அவள் வாசலுக்கும் பின்கட்டுச் சமையல் அறைக்குமாக மாறி மாறி நடந்து கொண்டிருந்தாள்.

பாலு விளக்கடியில் உட்கார்ந்து பாடம் படித்துக் கொண்டிருந்தான். அவள் சந்தேகக் கேள்விகளுக்கு நடுவில் பதில் சொல்வான். ஆனால் நடு நடுவே மனம் மட்டும் எங்கேயோ ஓடிக் கொண்டேயிருக்கும்.

மணி எட்டரை. "எனக்குச் சாதம் போடும்மா. வயிற்றைப் பசிக்கிறது" என்று முனகினான் பாலு.

"இருடா. அவரை எங்கேயோ இன்னும் காணோம். எனக்கு எதுவுமே ஓடவில்லை." பாலு ஏதோ சொன்னான். அவளுக்கு அது காதில் ஏறவில்லை. திகைப்பும் நினைவும் காதை அடைத்திருந்தன. சட்டென்று முன்றானையைப் பற்றி இழுத்தான் பாலு.

"பசிக்கிறதுன்னு உனக்குக் காது கேட்கலே? அப்பாவாம் அப்பா. எங்கே போயிடுவார் அப்படி? நேரமானால் தானே வந்துட்டுப் போறா."

சட்டென்று அவன்புறம் திரும்பினாள் இந்து. அவன் பேச்சில் தெறித்த உதாசீனம் அந்த வேளையில் அவளைக் கலக்கிற்று.

"என்ன சொன்னே?"

"ஆமாம். அப்படித்தான் சொல்லுவேன். என் மாதிரி அடி தின்னால் நீயும் அப்படித்தான் சொல்லுவே. மெதுவா வரட்டுமே? எனக்கு என்னவாம்?"

இந்து அவனருகே வந்தாள். அவன் அது வரை சாப்பிடாததும், அவனுடைய குழந்தைத் தன்மையும்கூட மறந்து போயிற்று.

"போடா. எதிர் வீட்டில் போய் அப்பா ஆபீசுக்கு 'போன்' பண்ணிக் கேளு. ஏன் அவர் வர நாழியாகிறது என்று தெரிந்து கொண்டு வந்து சொல்லு."

"முடியாது. நான் போக மாட்டேன்."

"என்ன சொன்னே?" குரல் நெருங்கி வந்தது.

"ஆமாம். நான் போக மாட்டேன். அவர் எங்கேபோயிருந்தால் எனக்கென்ன? வரவேண்டாம். அவர் வீட்டுக்கே வரவேண்டாம்."

ஓங்கிய அவள் கை சட்டென்று இறங்கிற்று. அடி ஒன்றுக்கு இரண்டாக விழுந்தது. மேலே அவன் பேசிய விதமாய், பேச விடாமல் பேசக் கூடாதென்று அடக்குவது போல் விழுந்தது. அவன் அழுது கொண்டே கீழே விழுந்து புரண்டதையும்கூட லட்சியம் செய்யாமல், அவளேவாசற்படி இறங்கிப்போனாள்.

போனில் ஆபீஸிலிருந்து கூர்க்காதான் பேசினான். பிற்பகல் ராஜு அங்கே வரவே இல்லையாம். எங்கே போனார் என்று யாருக்கும் தெரியாதாம். [illegible] என்று

அவன் காதுபடக் கிளார்க்குகள்கூடப் பேசிக் கொண்டார்களாம்.

நடுங்கிக் கொண்டே வாசற்படி ஏறி வந்தாள் இந்து. பெஞ்சியில் வந்து விழுந்தாள். கண்ணை இறுக மூடிக் கொண்டாள். உடல் வெட வெட வென்று நடுங்கிற்று. 'தக்தக்' என்று மார்பு அடித்துக் கொண்டது. கன்னத்திலும் கழுத்திலும் கசிந்த வியர்வையைத் துடைக்கக்கூட மனம் இல்லை. எங்கே போனார் அவர்? எங்கே அவர்?

பாலு விசித்தபடி தூங்குகிறான். பசித்த அவன் வயிற்றுக்குச் சோறும்கூடப் போடவில்லை. அவனை எழுப்பவும் நினைக்கவில்லை அவள். அவனையும் அந்த வீட்டையும் உதறிவிட்டு அவள் மனம் எங்கேயோ அலைபாய்ந்து கொண்டிருந்தது.

இரவு மணி பதினொன்றரை. ஒரு பெரிய படகுக் கார் வாசலில் வந்து நின்றது. ராஜு கீழே இறங்கிக் கொண்டு கதவின் உள் இருட்டில் உட்கார்ந்திருந்தவர் பக்கமாகக் கைகளைக் குவித்து வணங்கினான். வாசற்கதவை இலேசாகத் திறந்து பார்த்தவளுக்கு அவன் உருவத்தைக் கண்டதும், தெய்வமே கொண்டு வந்து சேர்த்தது போலிருந்தது.

அவன் உள்ளே நுழையுமுன், நகமெல்லாம் அந்தக் கோட்டின் முரட்டுத் துணியைக் கடந்து சதையில் அழுந்துவதைப் போல், இந்துவின் கையிரண்டும் அவன் தோளைப் பற்றிக் கொண்டிருந்தன.

''எங்கே போனீர்கள், யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல்? நான் என்னவெல்லாம் எண்ணி அலைபாய்ந்து கொண்டிருக்கிறேன்.'' அவள் குரல் அழுகையில் நடுங்கியது.

''பயந்து போனியா? அசடு. த்லொ, த்லொ. உள்ளே வா. சொல்றேன்'' என்று அவளை ஆதரவாக அணைத்தபடி உள்ளே வந்தான் ராஜு.

தூக்கக் கலக்கத்திலும் கவலையிலும் வியர்த்துப் பளபளத்த முகத்தைத் துடைத்துக் கொண்டு நின்றாள் இந்து. மூக்கிலும் கன்ன எலும்பிலும் கசிந்த எண்ணெய் மறைந்து துடைத்த சில மாதிரி இருந்தது.

''பெரிய ஸேட் வந்து விட்டார். ஒரு 'டெண்டர்' சமாசாரம். காதும் காதும் வைத்தது போல் முடிக்க வேண்டும் என்றார். கம்பெனி டைரக்டர்களில் மூத்தவர் அவர். நாளைக்குப் பதவி உயர வழி செய்யப் போகிறவர். நான் எப்படி இல்லை என்று சொல்லுகிறது?''

''இருந்தாலும் எங்கிருந்தாவது ஒரு 'போன்' செய்திருக்கலாம். நான் எவ்வளவு கலங்கிப் போனேன்?'' என்று முன்றானையால் கண்களை இழுத்துத் துடைத்து மூக்கை உறிஞ்சிக் கொண்டாள் இந்து.

''ஐ ஆம் ஸாரி'' என்று அவன் காதருகே சொல்லிவிட்டு, ''சரி. இலையைப் போடு. இன்றைக்கு இரண்டு பேரும் சேர்ந்து சாப்பிடலாம். எதிரும் புதிருமாக ஒரே தட்டில்'' என்று கண்ணைச் சிமிட்டினான் ராஜு. இந்துவின் கண்களில் ஒரு நாணம் படர்ந்தது.

''மறந்தே போனேன்'' என்று சொல்லிவிட்டுக் குனிந்து, கால்களை மடித்தவாறு தூங்கிவிட்ட பாலுவை எழுப்பினாள் இந்து.

இரண்டே வயதுதான் ஆகிறது. அந்தக் குழந்தை உத்தியோகம் பார்க்கிறது.

நம்ப மாட்டீர்களா? 71-ம் பக்கத்தைப் பார்த்தால் பிறகு நம்பித்தான் ஆகவேண்டும்!

''அவனை எதற்கு எழுப்புகிறாய்?''

''அவன் இன்னும் சாப்பிடவில்லை. கோபம் வந்தது. அடித்தேன். அப்படியே தூங்கிப் போய் விட்டான்.''

''அடித்தாயா? அவனையா? நீகூடவா? எதற்கு?'' என்று இடுப்பில் கையை வைத்துக் கொண்டு, கண்களில் சிறு ஏளனம் தெரிய நின்றான் ராஜு.

''நீங்கள் எங்கே போயிருக்கிறீர்கள் என்று தெரிந்து கொண்டு வரச் சொன்னேன். பசிக் கோபம் அவனுக்கு. உங்களைப் பற்றி ஏறுமாறும் இரண்டு வார்த்தைகள் சொன்னான். எனக்குத் தாங்கவில்லை....''

சட்டென்று அயர்ந்து நின்றான் ராஜு. இந்து குழந்தையை அடித்து விட்டாள். அவனைப் பற்றிப் பாலு சொன்னது அவளுக்குப் பொறுக்கவில்லை. அன்று? அன்று அவன் பாலுவைக் கண்டித்தது அவளுக்குப் பொறுக்கவில்லை. அவன் அணைப்பையும் உறவையும்கூட அதற்காக லட்சியம் செய்யவில்லை. இன்று மனைவியாக இருந்து அவனுக்குப் பரிந்து நிற்பவள், அன்று தாயாக இருந்து குழந்தைக்குப் பரிந்து பேசியிருக்கிறாள். ஒரே பெண்மையில் தெரியும் இரு உருவங்கள்; இரு தோற்றங்கள். ஆனால் அவைகளில் முரண் இல்லை. ஒரே அழகை இரு கோணங்களில் பார்த்து லயிப்பது போல் இருந்தது.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் என்னை?'' என்று கன்னங்கள் குழிந்து பளபளக்க ஒரு புன்னகையுடன் நிமிர்ந்தாள் இந்து.

''ஒன்றுமில்லை'' என்று கண்ணால் கூடத்து விளக்கு வெளிச்சத்தில் மாட்டியிருந்த கண்ணன் படத்தைப் பார்வையை உயர்த்திக் காட்டினான் அவன்.

குழந்தையின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு வீட்டில் செய்த விஷமங்களுக்காக அடிக்க வரும் யசோதைத் தாயார். கோபியர்கள் கண்ணன் செய்த விஷமங்களைப்பற்றிப் புகார் சொல்ல வந்ததும் அவர்களிடம் குழந்தைக்காகப் பரிந்து கொண்டு கடிந்து பேசும், அவர்கள் தலைவியாக யசோதை. இரண்டு கோலங்களையும் சித்திரத்தில் எழுதிக் காட்டி இருந்தது அங்கே.

''என்னை ஒன்றும் கேலி செய்ய வேண்டாம் நீங்க!'' என்று உத்தரத்து விளக்கடியில் தொங்கும் படத்தைப் பார்த்துக் கொண்டே சிரித்த முகத்துடன் உள்ளே போகத் திரும்பினாள் இந்து.

# விசேஷ அளிப்பு!

**ஸ்டாக் உள்ளவரை**




ஒவ்வொரு டின்னிலும் உள்ள போர்ன்விடாவின் அளவு
எப்போதும் போல் தான் (450 கிராம் நெட்)

**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**
**காட்பரிஸ் போர்ன்விடா!**

Bensons/5322 T.A.M.

# வீணான வாழ்வு

**பி.ஆர்.**

"என்னங்க, மறந்திட்டீங்களா? ஏதோ ஆபீஸ் வேலையாத் திமிரிக்கு ஒன்பது மணிக்கெல்லாம் போக வேண்டும் என்று ராத்திரி சொன்னீர்களே, போகவில்லையா?" என்று கேட்டாள் சரோ. இதைக் கேட்டதும் கடமை உணர்வு மேலிட்டவனாய் ஆபீஸ் சம்பந்தப்பட்ட பைல்களைக் கைப் பையில் அடுக்கிக் கொண்டு தலைதெறிக்க பஸ் நிலையத்துக்கு ஓடினேன். நான் பஸ் நிலையத்தை அடைவதற்கும் திமிரி பஸ் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

என்னைப் பார்த்ததும், "குட்மார்னிங் சார். இதோ இந்த சீட்டில் உட்காருங்கள்" என்று டிரைவர் கண்ணன் உபசரித்தார். அன்றாட வேலைகளின் காரணமாக அடிக்கடி திமிரி பஸ்ஸில் ஏறுவது எனக்குப் பழக்கம். அதன் காரணமாக டிரைவர் கண்ணன் எனக்கு அறிமுகமானவர்.

"ரைட்.... போகலாம், போப்பா !" என்று கண்டக்டர் குரல் கொடுத்ததும் திமிரியை நோக்கிப் பஸ் புறப்பட்டது. பஸ் வேகமாக ஆரணி கமண்டலநாக நதியைக் கடந்து சென்று கொண்டிருந்தது. ஆற்றுப் பாலத்தைக் கடந்த பஸ் பாதையோரத்தில் குடிசைகள் நிறைந்திருந்த ஓர் இடத்தில் ஓரமாக நின்றது. அப்பொழுது ஒரு குடிசையிலிருந்து பஸ் நின்ற சத்தம் கேட்டதன் விளைவாகவோ என்னவோ, "பாபா, பாபா, பாபா" என்று கூவிக் கொண்டே மூன்றே வயது மதிக்கத்தக்க பெண் குழந்தை கிழிந்த கவுன் ஒன்றை அணிந்தவளாய் பஸ்ஸுக்கு எதிரில் ஓடி வந்தாள். பிறை வடிவான முகம், மீன் விழி, அளவான மூக்கு, வாய் நிறைந்த சிரிப்பு இப்படித் தோன்றிய அந்தப் பெண் குழந்தை பார்ப்பவருக்குப் பரவசமூட்டும் குழந்தைத் தெய்வமாகக் காட்சி அளித்தாள்.



குழந்தையைக் கண்டதும் டிரைவர் கண்ணன் பஸ்ஸை விட்டுக் கீழே குதித்துக் குழந்தையைத் தூக்கி ஒரு முத்தமிட்டு விட்டுச் சிரித்தான். பிறகு தன் பையிலிருந்து மூன்று ஒரு ரூபாய் நோட்டுக்களை எடுத்துக் குழந்தையிடம் கொடுத்து, "போடா, கண்ணு. அம்மாவிடம் கொண்டு போய்க் கொடு" என்று சொல்லி விட்டு வண்டியில் ஏறினான். கண்ணனின் மனைவி குடிசையை விட்டு வெளியில் வந்து பணம் ஏந்திய குழந்தையைக் கையைப் பிடித்துக் குடிசைக்குள் அழைத்துச் சென்றாள்.

பஸ் புறப்பட்டுக் கொஞ்ச தூரம் சென்றதும் கண்ணன் என் பக்கமாகத் திரும்பி, "பேட்டா துட்டைக் குழந்தையிடம் கொடுத்தேன் சார் ! தினமும் குழந்தையிடம்தான் கொடுப்பது வழக்கம். அவளும் அந்த நேரத்துக்குத் தவறாமல் வந்து விடுவாள்" என்றான். "ஓஹோ !" என்று கண்ணன் வார்த்தைகளை ஆமோதித்த நான், "என்ன மிஸ்டர் கண்ணன், அது உன் குழந்தைதானே?" என்று கேட்டேன்.

"ஏன் சார் அப்படிக் கேட்கிறீங்க?" என்று கண்ணன் என்னையே பார்த்துக் கொண்டு வண்டியைச் செலுத்தினான்.

அவன் பார்வைக்குப் பதில் அளிக்கும் வகையில்," அதற்கில்லையப்பா, நீ குழந்தையை அணைத்து முத்தமிட்டபோது உன்னையும் அறியாமல் உன் கடைக்கண்ணில் நீர் முட்டியதை நான் கவனித்தேன். அதனால் அது ஆனந்தக் கண்ணீரா? அல்லது அந்தக் கண்ணீரில் ஏதாவது கதை மறைந்திருக்கிறதா என்பதை அறிந்து கொள்வதற்காகத் தான் கேட்டேன். என்ன உன் குழந்தைத் தானே ?" என்று மீண்டும் கேட்டேன்.

டிரைவர் கண்ணன் எதையோ யோசித்தவனாய், "என் குழந்தை மாதிரிதான் சார் !" என்று இழுத்துப் பதில் கொடுத்தான்.

கண்ணன் கூறியது என் சிந்தனையைத் தூண்டியது. 'கண்ணனுக்கும் குழந்தை இல்லையா?' என்று கேட்டது என் அக மனம். காரணம் எனக்கும் குழந்தை கிடையாது.

"என்ன சார், குழந்தை உன்னுடையதா என்று கேட்டுவிட்டு எதையோ நீங்கள் சிந்தனை செய்கிறீர்கள்?" என்று கேட்டுக் கண்ணன் என் சிந்தனையைக் கலைத்தான் மீண்டும்.

"நீதான் என் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டும்" என்றேன் கண்ணனைப் பார்த்து.

"சார்! நானும் என் மனைவியும் சுமார் மூன்று ஆண்டுகளுக்குமுன் திருவல்லிக்கேணியில் வசித்து வந்தோம். நாங்கள் குடியிருந்த வீடு



மிகவும் பழைய வீடு. அது மட்டுமல்ல; அது மிகவும் சிறிய வீடு. அந்தச் சிறிய வீட்டில் இரண்டு 'போர்ஷன்'. ஆகவே, இரண்டு குடும்பம். ஒரு குடும்பம் நானும் என் மனைவியும். அடுத்த குடும்பம் நூல் வியாபாரம் செய்யும் ராமன், அவனது மனைவி குமாரி, அவர்களது இளம் குழந்தை ராணி. எனக்கும் என் மனைவிக்கும் திருமணமானதிலிருந்து குழந்தையே இல்லாததினால், அடுத்த குடும்பத்துக் குழந்தை ராணியை நானும் என் மனைவியும் உயிருக்குயிராய் நேசித்தோம். அடிக்கடி என் மனைவி குழந்தை ராணியைத் தூக்கிக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்து விடுவாள். நாங்கள் இருவரும் குழந்தையோடு கொஞ்சியும் குலாவியும் விளையாடுவோம்.

''ஒரு நாள் இரவு. ஒரே புழுக்கமாய் இருந்ததால் நானும் என் மனைவியும் தூக்கமின்றி நெடுநேரம் எதெதையோ பேசிக்கொண்டே படுத்திருந்தோம். இரவு மணி ஒன்றையும் கடந்திருக்கும். பக்கத்துப் போர்ஷனில் குழந்தை ராணி 'வீல் வீல்' என்று ஒரே சத்தமிட்டு அழுதாள். அவள் பெற்றோர் எழுந்து குழந்தையைத் தூக்கியதாகக் காணோம். குழந்தை மிகவும் கூச்சலிட்டு அழுதாள். 'என்ன இது! குழந்தை இப்படிக் கத்துகிறாள். அவர்கள் இருவரும் தூங்குகிறார்களே. நீங்களாவது கதவைத் தட்டி எழுப்புங்கள்'' என்று என் மனைவி என்னைத் தூண்டினாள். சற்று நேரம் நான் தூங்கினேன். என்றாலும், குழந்தை ராணி அழுவதைச் சகிக்க முடியாதவனாக, 'ராமா, ராமா' என்று கத்தியவுடன், பக்கத்துப் போர்ஷன் கதவைப் பலம் கொண்ட மட்டும் இடித்தேன். பலன் இல்லை. ராமனும் எழுந்திருக்கவில்லை. அவன் மனைவியும் எழுந்திருக்கவில்லை. ஆனால் ராணி மட்டும் முன்பு அழுததைவிட இரண்டு மடங்கு குரலில், 'வீல் வீல்' என்று கத்தினாள். வெளியில் வாளாவிருந்த நானும் என் மனைவியும் செய்வதறியாது திகைத்தோம். மீண்டும் எனது பலம் கொண்ட மட்டும் ராமன் வீட்டுக் கதவை இடித்தோம். பலன் இல்லை. இதற்குள் அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் தூக்கம் கெட்டு, 'என்ன என்ன' என்று ஓடி வந்தார்கள். வந்தவர்களில் ஒருவர் துணிந்து கதவைப் பெயர்த்துத் தள்ளினார். நானும் என் மனைவியும் உள்ளே ஓடினோம். என் மனைவி ராணியைத் தூக்கி அணைத்துக் கொண்டாள். ஆனால் ராமனும் அவன் மனைவியும் உறங்குவது போலவே ஆடாது அசையாது படுத்திருந்தார்கள். நாங்கள் ஒன்றும் புரியாமல் இருவரையும் தட்டி எழுப்பினோம். பயனில்லை. வந்தவர்களில் ஒருவர், 'ஏதோ ஆபத்து நேர்ந்திருக்கிறது. டாக்டரைக் கூப்பிடுங்கள்' என்றார். உடனே நான் ஓடிப் பக்கத்துத் தெரு டாக்டரை அழைத்து வந்தேன். சிறிது நேரம் பரிசோதித்த டாக்டர், 'இருவரும் பாம்பு கடித்துச் செத்து விட்டார்கள். நல்லவேளை, குழந்தை பிழைத்தது. என்றார். எனக்கும் என் மனைவிக்கும் உலகம் இருண்டது. கூடியிருந்தவர்கள் எல்லாரும் ஒரே குரலில்,'இது ரொம்பப் பழைய காலத்து ஓட்டை வீடு. மேல் கூரை ஓட்டிலிருந்து வெய்யில் கால ஒடுக்கத்துக்காக வெளி வந்த விஷப் பாம்பு ரெண்டு பேரையும் தீண்டி விட்டது. பாவம், குழந்தை இந்தச் சின்ன வயதிலேயே அநாதை ஆகிவிட்டது' என்றார்கள். அன்று முதல் ராணி எங்கள் குழந்தையாகி விட்டாள் சார். எனக்கும் ஆரணியில் வேலை கிடைத்தது. இங்கு வந்து மூன்று வருஷங்களாகின்றன. ராணிக்கும் மூன்று வயதாகிறது'' என்று கண்ணன் கதையை முடிப்பதற்கும் பஸ் திமிரியை அடைவதற்கும் சரியாயிருந்தது.

''சரி, கண்ணன்! நான் வருகிறேன். ராணியின் கதை ரொம்பச் சோகமானதுப்பா. நீதான் அவளுக்குத் தந்தை. அவளை நன்றாக வளர்ப்பது உனது கடமை'' என்று சொல்லி விட்டு நான் என் அலுவலைப் பார்க்கச் சென்று விட்டேன்.

நான் வந்த காரியம் முடிய மணி மூன்று ஆகியது. உடனே ஆரணிக்குத் திரும்பும் ஆவலில் பஸ் ஸ்டாண்டுக்கு வந்தேன். இப்போது கண்ணன் ஓட்டும் பஸ் இல்லை. 'ரங்க விலாஸ்' பஸ் ஆரணிக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தது. அவசரம் அவசரமாக நான் பஸ்ஸுக்குள் ஏறியதும் பஸ் ஆரணியை நோக்கி ஓடியது.

இப்போது ஓடும் பஸ்ஸில் கண்ணன் டிரைவராக இல்லா விட்டாலும் அவன் சொன்ன கதை என் காதுகளில் அலைமோதியது. ஏனோ ஒரு முறை கண்ணனையும் என்னையும் என் மனம் ஒற்றுமைப்படுத்திப் பார்த்தது. கண்ணன் சாதாரணமாகக்கூடப் படிக்காதவன். டிரைவர் வேலையில் வரும் பணத்தைக் கொண்டு பிழைப்பை நடத்துபவன். நானோ எம். ஏ. பட்டதாரி. மாதம் அறுநூறு ரூபாய் சம்பாதிக்கும் ஒரு பொறுப்புள்ள சர்க்கார் ஊழியன். - ஆனால் கண்ணனது பண்பாடும் எனது பண்பாடும்....? இந்த இடம்தான் கேள்விக்குரியதாகும். சாதாரண வாழ்க்கை வாழும் கண்ணன் அனாதையான ஒரு குழந்தையைச் சந்தித்த போது தனக்குக் குழந்தை இல்லை என்ற சாக்கில் அதனை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டான். அதே குழந்தை இல்லாத நான், தர்மராவ் மகன் மூர்த்தி அனாதை என்று என்னிடம் வந்த போது என்ன செய்தேன்?

பதில் இதோ :

நானும் என் மனைவியும் குண்டூரில் வாழ்ந்தபோது, எங்களது அண்டை வீட்டுக்காரராக தர்மாராவும் அவரது மனைவி சாந்தாவும் வசித்து வந்தார்கள். அவர்கள் மாத்துவர்கள்; நாங்களும் மாத்துவர்கள். எங்கள் இருகுடும்பமும் மிகவும் நட்புறவோடு பழகி வந்தது. எனக்கும் சரோவுக்கும் குழந்தை கிடையாது. தர்மாராவுக்கும் சாந்தாவுக்கும் மூர்த்தி என்ற இளம் குழந்தை இருந்தான். பெயருக்குத்தான் அவன் தர்மாராவின் குழந்தையே ஒழிய அல்லும் பகலும் அறுபது நாழிகையும் மூர்த்தியைச் சரோவே அணைத்துக் கொண்டு காரியங்கள் செய்வாள். எனக்கும் மூர்த்தியின் மீது மிகுந்த அன்பும் ஆசையும் பெருகி இருந்தது.

ஒரு நாள் தர்மா ராவும் அவரது மனைவியும் குழந்தை சகிதமாய்ப் பக்கத்து ஊரில்

# பஜாஜ் மின் விளக்குகள்











## மற்றும் மின் விளக்கு சாதனங்கள்

- கடுமையான தர நிர்ணயங்களுக்கு உட்பட்ட தயாரிப்பு
- வீடு, வியாபாரம், தொழில் மற்றும் தெரு விளக்குத் தேவைகளை பூர்த்திச் செய்ய பல்வேறு தினுசுகளில் கிடைக்கின்றன.
- உன்னத ஒளிக்கு தேர்ந்தெடுங்கள் பாஜாஜ்.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர நரிமான் ரோடு, பம்பாய்-1. இந்தியாவெங்கிலும் கிளைகள்.



ஏதோ ஒரு பெரிய தெய்வ ஸ்தலத்துக்குப் போய்விட்டு வருவதாகச் சொல்லிச் சென்றார்கள். கோயிலுக்கு உள்ளே நுழைவதற்கு முன்னால் ராவும் அவரதும் மனைவியும் குழந்தையைக் கோயில் குளக்கரையில் படுக்க வைத்துவிட்டு ஸ்நானம் செய்வதற்காகக் குளத்தில் இறங்கினார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம், ''ஐயோ! கால் வலிக்கிறதே!'' என்று சாந்தா அலறியிருக்கிறாள். ''இதோ என்னைப் பிடித்துக் கொள்'' என்று ராவ் தம் கைகளை மனைவி பக்கம் நீட்டியிருக்கிறார். அவ்வளவுதான். தர்மகர்த்தாவும் சாந்தாவும் குளத்தில் மூழ்கி விட்டார்கள். அவர்களைக் கரை சேர்த்த போது உயிர் இல்லை.

இந்தச் செய்தி என் மனைவிக்கும் எனக்கும் பகீரென்றது. என் மனைவி சரோ, ''ஐயோ, பாவம்! குழந்தை மூர்த்தி அனாதையாகிவிட்டானே !'' என்று வேதனைப்பட்டாள்.

எனக்கும் மிகவும் வேதனையாகத்தான் இருந்தது. சரோ சற்று நேரத்துக்கெல்லாம், ''என்னங்க, எனக்கு ஒன்று தோன்றுகிறது'' என்றாள்.

''என்ன?'' என்று கேட்டேன்.

'' நமக்குத்தான் குழந்தை இல்லையே, மூர்த்தியை நாமே எடுத்து வளர்த்தால் என்ன?'' என்று சரோ தயங்கித் தயங்கிச் சொன்னாள்.

''என்ன சொன்னாய்? நாம் அனாதைக் குழந்தையை எடுத்து வளர்ப்பதா? நாம் என்ன கிழவர்களாகி விட்டோமா? அல்லது இனி குழந்தையே பிறக்காது என்று முடிவு கட்டி விட்டாயா? அதெல்லாம் முடியாது. மூர்த்தி யாரோ, நாம் யாரோ ! நமக்குள் என்ன சொந்தம்? நாம் ஏன் அந்தக் குழந்தையை எடுத்து வளர்க்க வேண்டும்? உன் யோசனை எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை'' என்று கத்தினேன். சரோ பதில் பேசத் துணிவில்லாதவளாய் வாயை மூடிக் கொண்டாள். பிறகு அந்த அனாதைக் குழந்தை மூர்த்தியை அனாதை விடுதியில் சேர்த்து விட்டோம். எங்களுக்கும் பிறகு குண்டூரிலிருந்து மாற்றலாகி விட்டது.

கண்ணனுக்கும் எனக்கும் எத்தனை வேற்றுமையைக் காட்டுகிறது? குழந்தையில்லாத காரணத்தால் அனாதைக் குழந்தையை வளர்க்கத் துணிந்த அவன் எங்கே? ஓர் அனாதைக் குழந்தையை வளர்க்கலாம் என்று என் மனைவி எனக்கு யோசனை சொன்ன போதும் அதைத் தட்டிக்கழித்த நான் எங்கே?

இந்த அலட்சியப் புத்தியினால்தானோ என்னவோ எனக்கும் சரோவுக்கும் குழந்தைகளே இல்லை. என் சிந்தனை முடிவதற்கும் பஸ் ஆரணி வருவதற்கும் சரியாக இருக்கவே சோர்ந்த மனத்துடன் வீட்டுக்குச் சென்றேன்.

ஆண்டுகள் பல கழிந்துவிட்டன. எனக்கும் ஆரணியை விட்டுச் சென்னைக்கு மாற்றலாகி விட்டது. சென்னை நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் இருக்கும் எனது தலைமை அலுவலகத்தில் பொறுப்பேற்பதற்காக ஆரணி பஸ்ஸில் சென்னை சென்ற நான் ஜெமினி ஸ்டுடியோ அருகில் இறங்கி நடக்கலானேன்.

சாலை வழியே சென்ற கார் ஒன்று 'சர்' என்று வந்து என் பக்கத்தில் நின்றது.

''சார்! சார் !'' என்று கூவிக் கொண்டே டிரைவர் கண்ணன் இறங்கினான்.

கண்ணனைப் பார்த்ததும் திடுக்கிட்டவனாய், ''அடேடே ! என்னப்பா கண்ணு ! உன்னைப் பார்த்து ரொம்ப நாள் ஆகிவிட்டதே. சௌக்கியமா?'' என்று கேட்டேன்.

''சார்! நான் ஆரணியை விட்டு வந்து பதினேழு வருடங்கள் ஆகிவிட்டன சார். சென்னைக்கு வந்த பிறகு ராணியைக் கல்லூரி வரை படிக்க வைத்தேன். நேற்றுத்தான் ராணிக்குத் திருமணம். உங்களை அழைக்க முடியவில்லை. இப்போது 'உட்லண்ட்'ஸில் விருந்துக்காகப் பெண்ணையும் பிள்ளையையும் அழைத்துச் செல்லுகிறேன். தயவுசெய்து நீங்களும் கலந்து கொள்ள வேண்டும்'' என்று என்னை அழைத்த கண்ணன், ''ராணி, கீழே இறங்கி வாம்மா. ஐயாவுக்கு வணக்கம் சொல்'' என்றான்.

காரிலிருந்து கீழே இறங்கிய மணப்பெண் அழகு ராணி எனக்கு வணக்கம் தெரிவித்தாள். அவளைத் தொடர்ந்து இறங்கிய மாப்பிள்ளையும் எனக்கு வணக்கம் தெரிவித்தார். இருவரையும் பதிலுக்கு வணங்கிய நான், ''என்னப்பா கண்ணு, மாப்பிள்ளை பெயர் என்ன? எந்த ஊர் ?'' என்றேன்.

''மூர்த்தி என்பது என் பெயர் சார். நான் ஓர் அநாதை. என் தாயும் தந்தையும் குண்டூரில் இறந்து விட்டார்களாம். அநாதை விடுதியில் வளர்ந்து நான் இன்று வருமான வரி அதிகாரியாக வேலை பார்க்கிறேன். ராணியும் அதிகாரியாகத்தான் வேலை பார்க்கிறாள். நாங்கள் இருவரும் காதல் திருமணம் செய்து கொண்டோம்'' என்று மூர்த்தி தெளிவாக எடுத்துரைத்தான்.

மூர்த்தி சொன்னதைக் கேட்டதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. குண்டூர் தர்மராவ் மகன் மூர்த்தியே நம்முடன் பேசுகிறான். ஆம், ஆம். அவனேதான் என்று அடித்துச் சொன்னது எனது அக மனம்.

கண்ணன் சொன்னான்: ''ஒரு வேடிக்கையைக் கேளுங்க. மூர்த்தியைப் பச்சைப் புள்ளையிலே யாரோ அனாதை விடுதியிலே சேர்த்துட்டாங்களே ஒழிய இவரோட அப்பா ஐம்பதாயிரம் ரூபாய் சொத்துள்ளவராம். வக்கீலய்யா பொறுப்பிலே சொத்து இருந்திச்சு. கூட்டிக் கழிச்சுப் பார்த்தா இன்னிக்கு அது இரண்டு லட்சத்துக்கு மேல் மதிப்புள்ள சொத்தாயிருக்குது. பையன் மேஜராயிட்டானேன்னு வக்கீல் இவனைத் தேடிப் பிடிச்சுச் சொத்தை ஒப்படைச்சாரு. நம்ப மாப்பிள்ளை மூர்த்தி என்ன செய்தது தெரியுங்களா ? தன்னை வளர்த்த அநாதை விடுதிக்குப் பாதிச் சொத்தும் பாக்கிப் பாதியை எனக்கும் எழுதி வைச்சடுச்சு. 'நான் இன்றைக்கு வருமான வரி அதிகாரியாய் இருந்து சம்பாதிப்பதே எனக்கும் ராணிக்கும் போதும்' அப்படின்னு சொல்லிடுச்சு. தம்பி மனசு தங்கம் இல்லீங்க ?'' தலை சுற்றிக் கீழே விழாமல் நான் ஒரு மாதிரி வீடு வந்து சேர என்ன பாடுபட்டிருப்பேன் என்பதைச் சொல்லவும் வேணுமோ ?

# வனப்பும், புத்துணர்ச் சியும் பெற உபயோகியுங்கள்-சிந்தால்

நீங்கள் மாசுமருவற்ற எழிலைப் பெற, நாள் முழுவதும்
புத்துணர்ச்—சியுடன் திகழ, உபயோகியுங்கள்-
இருவகையில் நன்மை புரியும் சிந்தால் சோப்.
உலகிலேயே மிகச்சக்தி வாய்ந்த கிருமி
நாசினியாகிய ஜி-11(ஹெக்ஸாக்ளோரோஃபீன்)
அடங்கியதுசிந்தால்.

ஜி-11 அடங்கிய சிந்தால் மட்டுமே உங்களுக்கு
வனப்பையும், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது.




**சிந்தால் உண்மையிலேயே ஒரு துர் நாற்ற மகற்றும் சோப்**

Interpub/GS/20A Tam

# விழித்தெழுவோம்; வீரம் பெறுவோம்!

"புனர்வஸு"

குமரிக் கடலிலுள்ள பாறையில் விவேகானந்தருக்கு ஞாபக மண்டபம் மூலம் பாரத நாட்டு மக்கள் தம் நன்றியைத் தெரிவிக்க வேண்டும் என்ற எண்ணம் சுமார் ஏழு ஆண்டுகளுக்குமுன் சென்னையில் சில உத்ஸாகிகளுக்கு ஏற்பட்டது. எப்படி விவேகானந்தர் சிகாகோ செல்ல வேண்டும் என்ற தூண்டுதல் சென்னையிலேதான் ஏற்பட்டதோ, அப்படி விவேகானந்தர் சிலை, ஞாபக மண்டபத்துக்கான கருத்தும் சென்னையிலேதான் எழுந்தது. கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து தீவிரமான அகில பாரத இயக்கமாய் உருவெடுத்தது. ஏதோ சில லட்ச ரூபாய்களுக்குள் செய்து முடிக்கலாம் என்றிருந்த திட்டம் ஒரு கோடி ரூபாய் செலவில் மாபெரும் செயலாகச் சென்ற 2-9-70 அன்று கைகூடியது. ஆயிரக் கணக்கான மக்களுக்கிடையே ராஷ்டிரபதியே வந்து திறந்துவைத்தார். சமீப காலத்தில் இந்தியாவிலேயே இது போன்ற நினைவு மன்றமோ, நினைவு விழாவோ நடக்கவில்லை என்றவாறு அழகாயும், ஆச்சரியமாயும் இவ் விழா நடந்து நிறைவுற்றது.

காலை ஐந்து மணிக்கு ருத்ர ஜபத்தின் ஒலி குன்றிலிருந்து அலைகள் மேல் வந்து குமரிக் கரையிலிருந்தோரை எழுப்பியது. விடியற் கால ஒளியில் பாறையின் மேல் மண்டபத்தின் தோற்றம் மக்கள் உள்ளத்தில் தெய்வீக உணர்ச்சியை எழுப்பியது.

நம் ஆசாரியாளின் ஆக்ஞைப்படி ஆகஸ்ட் 21ந் தேதி தேவி பாதத்தில் வைதிக ஜப ஹோமங்கள் நடத்தப்பட்டன. அது போலவே செப்டம்பர் 2ந் தேதி காலையில் ஐந்து மணியிலிருந்து ஜப ஹோமங்கள் தொடங்கி எட்டு மணி வரை நடந்தன. விவேகானந்தர் நினைவுச் சின்ன கமிட்டியினர் தவிர, ராமகிருஷ்ண மிஷன் தலைவர் ஸ்வாமி வீரேச்வரானந்தர், சென்னை ராமகிருஷ்ண மடத்தின் தலைவர் கைலாஸானந்தர் மற்றும் கல்கத்தா, மைசூர், கேரள இராமகிருஷ்ண மடங்களைச் சார்ந்தவர்களான சுமார் இருபது சன்னியாசிகளும் ஸ்ரீ சின்மயானந்தரும் அவர் சிஷ்யரும் எல்லோரும் கூடியிருக்க மந்திர பூர்வமான கலச ஜலத்தை ஸ்ரீ வீரேச்வரானந்தர் விவேகானந்தர் சிலையின் மேல் ப்ரோக்ஷணை செய்து புஷ்பாஞ்சலியையும் கர்ப்பூர ஹாரத்தியையும் செய்தார்.

ஒன்பதரை மணிக்குப் படகு மூலம் தமிழ் நாட்டு முதல்வரும், ஹெலிகாப்டர் மூலம் ராஷ்டிரபதியும் பாறையில் வந்திறங்கினர். ஸ்ரீ வி. வி. கிரி அவர்கள் குத்து விளக்கேற்றிக் கதவைத் திறந்து வைத்தார். இந்தியாவின் பல திக்குகளிலுள்ள க்ஷேத்திரங்களிலிருந்து வந்திருந்த பிரஸாதங்கள் வழங்கப்பட்டன.

பத்தரை மணிக்குக் கடற்கரையில் தேவியின் ஆலயத்துக்குப் பின்புறம் திறப்புவிழா ஆரம்பமாயிற்று. இவ்விழாவில் ஐயாயிரம் மக்கள் கலந்து கொண்டனர். ஆனால் குமரி முனைக்கு நினைவுச் சின்னத்தைக் காண வந்திருந்த கூட்டம் இதனினும் அதிகமே.

கமிட்டியின் உதவித் தலைவர் டாக்டர் வே. ராகவன் தாம் கன்யாகுமரியைப் பற்றி ஏற், விவேகானந்தரையும் அவர் பணியையும் போற்றியும் இயற்றியிருந்த ஸம்ஸ்கிருத ச்லோகங்களைப் படிக்க, மங்களமாய் நிகழ்ச்சி தொடங்கியது. கமிட்டித் தலைவர் மேற்கு வங்க மாஜி தலைமை நீதிபதி ஸ்ரீ டி. என்.

ஜனாதிபதி வி. [வி. கிரி] கன்னியாகுமரியில் விவேகானந்தர் பாறை ஞாபகார்த்தத்தின் திறப்பு விழாவில் பேசுகிறார். இந்த [வைபவத்தில் கலந்து கொண்ட திரளான மக்கள்.





"உனக்கு ஆச்சரியம் ஏற்பட்டால் எப்படி இருப்பாய்?"

"நான் கேட்ட வைர நெக்லெஸ்ஸை வாங்கித் தாருங்கள். அப்போது தெரிந்து கொள்ளலாம்."

- சாம்பமூர்த்தி

வின்னு அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். உபராஷ்டிரபதி, பூஜ்ய ராஜாஜி, மந்திரிகள், கவர்னர்கள், அமெரிக்கத் தூதர் முதலியோரிடமிருந்து வந்த செய்திகளைச் செயலாளர் கே. ஆர். சுந்தரராஜன் படித்தார். இந்த நினைவுத் திட்டத்தைத் தன் இடைவிடா உழைப்பால் உருப்படுத்திய ஸ்ரீ ஏகநாத் ரானடே நாடெங்கும் தரப்பட்ட ஒத்துழைப்பையும் நிதித் திரள்களைப் பற்றியும், இந்த நினைவு மன்றம் உருவான கதையையும் சொல்லி, மத்திய அரசாங்கம் பதினைந்து லட்சம் கொடுத்திருப்பதையும் தெரிவித்தார். திட்டத்தில் இனி செய்யவிருக்கும் வேலைகளையும் சொன்னார்.

வயது முதிர்ந்த ஸ்ரீ வைத்தியநாத ஸ்தபதியும் இளைஞரான கருப்பைய ஸ்தபதியும் இந்த நிர்மாணப் பணியைத் தொடங்கியவர்கள். பிறகு கருப்பைய ஸ்தபதி தம் மேற்பார்வையிலும் திட்டத்திலும் சுமார் 450 சிற்பிகளையும் மற்ற வேலைக்காரர்களையும் கொண்டு இந்தக் கருங்கல் மண்டபத்தைக் கட்டி முடித்தார். பேலூர் மடத்தின் தொடர்பைக் காட்டும்படியான ஒரு சின்னத்தைத் தவிர, மற்ற சிற்பாம்சங்களில் அஜந்தா, எல்லோரா, பல்லவ — சோழ காலச் சிற்பப் பாணிகள் பின்பற்றப் பட்டுள்ளன. மண்டபம் இந்தியக் கலையின் ஸம்ஷ்டியாக நிர்மாணமாயிருக்கிறது. பாறை மேலுள்ள குறுகிய இடத்தை வெகு சாமர்த்தியமாய் உபயோகித்திருப்பதால் ஏதோ பெரிய கட்டடம் போல் தோன்றுகிறது. விவேகாநந்தர் சிலையுள்ள நடு மண்டபத்துக்குப் பின் "ஓம்" என்ற பீடம் ஒன்றை மட்டும் கொண்ட தியான மண்டபம் ஒன்று நிறுவப்பட்டிருப்பதும் மிகவும்மெச்சத்தக்கது. இதன் சுவர்களில் விவேகாநந்தர் வாழ்க்கை, மேநாட்டு விஜயம் முதலிய சரித்திர ஞாபகங்கள் வரைய ஏற்பாடாயிருக்கிறது. நடு மண்டபத்தில் வைத்திருக்கும் விவேகாநந்தரின் ஐந்தே காலடி உயர வெண்கலச் சிலை பம்பாய் ஜே. ஜே. ஸ்கூல் ஆப் ஆர்ட்ஸ் ஆசிரியர்களுள் ஒருவரான இளம் சிற்பி சோனவடேகரால் செய்யப்பட்டது. சிற்பி, பிம்பத்தில் வீரத்தையும் கம்பீரத்தையும் காட்டியிருப்பது போல் முகத்தில் ஓர் ஒளியையும், வேகத்தையும், புன்னகையையும் அமைத்திருப்பது மெச்சத் தக்கது. சிற்பிகளுக்கு ராஷ்டிரபதி பொன்னுடைகளையும் பரிசுகளையும் வழங்கினார்.

ராமகிருஷ்ண மிஷன் தலைவர் ஸ்ரீ வீரேச்வராநந்தர் தமது ஆசியைக் கூறியபிறகு தமிழக முதன் மந்திரி திரு கருணாநிதி, தம் தலைமை உரையை ஆங்கிலத்திலும் தமிழிலும் நிகழ்த்தினார். அவர் படித்த ஆங்கில உரையில் விவேகாநந்தர் வாழ்க்கையிலும் பணியிலும் தமிழ் நாட்டுக்குள்ள நெருங்கிய தொடர்பையும், தமிழ் நாடு பல அறிவாளிகள் கூடும் பேறு பெற்ற நாடு என்றும் இந்த நினைவு மன்றம் நம் பண்பாட்டின் காவலராய் நிற்கும் என்றும் சொன்னார். மக்கள் முன்னேற்றத்தில் விவேகாநந்தர் எடுத்துக் கொண்ட அக்கறையை விவரித்தார். தமிழில் பேசியபோது இந்த நினைவுச் சின்னம் மூன்று கடல்கள் சந்திக்கும் இடத்தில் உள்ளது. இக்கடல்கள் தனித் தனிப் பெயர்களைக் கொண்டிருந்தும் நீர் என்ற அளவில் எல்லாம் ஒன்றேயாவதுபோல், பல்வேறுபட்ட மதங்கள் எல்லாம் ஒரே உண்மையையே காட்டுகின்றன என்றார். விவேகாநந்தரின் வீரம், துணிச்சல் என்ற முக்கிய குணங்களைச் சுட்டிக் காட்டினார். 'உத்திஷ்டத, ஜாக்ரத' என்று அவர் விடுத்த சிறந்த சந்தேசத்தை ஸம்ஸ்கிருத மொழியிலேயே சொல்லி, விவேகாநந்தர் சொன்ன உழைப்பே நாட்டுக்குத் தற்போது தேவையான சாதனை என்று வற்புறுத்தினார்.

ராஷ்டிரபதி கிரி அவர்கள் தம் தொடக்க உரையில் சொன்னார்: "நாம் விவேகாநந்தருக்குப் பல வகையிலும் கடன்பட்டிருக்கிறோம். நாடு முழுவதும் பிரிவினை இயக்கங்களும், நாசச் செயல்களும் ஏற்பட்டிருக்கும் இந்தத் தருணத்தில் விவேகாநந்தரின் உபதேசங்கள் நமக்கு மிகவும் தேவை; அவர் உபதேசங்களை நாம் கேட்டு அதன்படி நடக்காவிட்டால் ஒரு கோடி ரூபாய் செலவில் நிறுவப்பட்டுள்ள இந்த நினைவு மன்றம் வீணே; ஆத்மிக — வேதாந்தத் துறைகளில் மட்டுமல்லாமல் பொதுமக்கள் வாழ்க்கையில் முன்னேற்றமடையவும் வழிகளை அவர் காட்டினார்; "மனிதனாய் இரு", "மனிதனுக்கும் கல்வியே கல்வி" என்ற தாரக மந்திரத்தைப் போதித்தவர் விவேகாநந்தர்."

குமரி தேவஸ்தான அதிகாரி டாக்டர் எஸ். நடேசன் நன்றி கூறினார்.

திறப்பு விழாவை யொட்டி 'விழியின் எழுமின்' என்ற பெயர் தாங்கிய சித்திரக் காட்சியும் நடைபெற்றது.

பகவான் ராமகிருஷ்ணர், சுவாமி விவேகாநந்தர் ஆகியோரது உபதேச மொழிகளை உலகுக்குப் பரப்புவதுடன் நாமும் வழுவாது கடைப்பிடித்து நானிலத்தின் மதிப்பில் உயரக் குமரித் தெய்வம் அருள் புரியட்டும்.

# நம்ம வீட்டுக் குப்பை

மாரி–அறவாழி

“அம்பு வந்திருக்கிறான் போலிருக்குதுங்களே....”

குனிந்தபடி நடந்து வந்து கொண்டிருந்த நரசிம்மய்யா மெதுவாக நிமிர்ந்து பார்த்தார். ஒரு கணம் என் முகத்தையே உற்றுப் பார்த்துவிட்டு உற்சாகம் இல்லாத குரலில் பதில் அளித்தார்.

“ஊ....ம்....”

“காலையில்தான் பார்த்தேன். நல்ல வேளை... எங்கு போனானோ என்ன ஆனானோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம்... புத்திசாலித்தனமாகத்தான் நடந்து கொண்டிருக்கிறான்...”

நரசிம்மய்யா பதில் பேசவில்லை. ஏதோ சிந்திப்பது போல் எங்கோ பார்த்துக் கொண்டிருந்தார். அந்தப் போக்கு அவருக்கு இயல்பானதல்ல. யாரைப் பார்த்தாலும், குறிப்பாக என்னைப் பார்த்து விட்டால் விடாமல் பிடித்துக் கொண்டு, கிளிஞ்சலைப் பாறை மீது கொட்டுவதுபோல் கலகலவென்று சிரித்துப் பேசுவார். அப்படிப்பட்டவருக்குத் திடீரென்று என்ன வந்துவிட்டது இன்று?

‘பெரியவர் மனம் சரியில்லை போலிருக்கிறது. பிறகு பார்த்துக் கொள்ளலாம்...’ என்று மனத்தில் எண்ணிக் கொண்டே அவரிடம் விடைபெற முயன்றேன். ஆனால் அவர் டக்கென்று என் கையைப் பிடித்துக்கொண்டு, “ரொம்ப அவசரமோ?” என்று கேட்டார்.

“அப்படி யொன்றுமில்லை...” என்று நின்றேன் நான்.

“பிறகு ஏன் அப்படிப் பறக்கிறாய்?...வா... கொஞ்ச நேரம் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போகலாம்...”

“நான் தயார்தான்... ஆனால் உங்களைப் பார்த்தால்தான் எப்படியோ இருப்பதுபோல் இருக்கிறது. இன்றைக்கு!... வீட்டை விட்டு ஓடிப்போன பையன் திரும்பி வந்திருக்கிறான். மகிழ்ச்சியாக இருக்க வேண்டாமா?...”

“மகிழ்ச்சி!....ம்ம்... அது ஒன்றுதான் குறை... எதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டும்....”

“ஏன் சார் அப்படிச் சொல்கிறீர்கள்?...என்ன குறை உங்களுக்கு?...”

அவர் என்னைப் பழையபடி முறைத்துப் பார்த்தார். பின்னர் நடந்தார். நானும் பின் தொடர்ந்தேன். சாலை



யோரத்திலிருந்த ஒரு மதிலின் மேல் இருவரும் உட்கார்ந்தோம்.

'பேசிக் கொண்டிருப்போம், வா!' என்று அழைத்து வந்தவர், பேசாமலே வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அமைதியைக் கலைத்தேன்நான்.

''கான்பூரில் நல்ல செருப்புக் களும், கம்பளிப்போர்வைகளும் கிடைக்குமே. அம்பு ஏதாவது வாங்கி வந்தானு?..''

நரசிம்மய்யாவின் முகத்திலிருந்த கசப்பு பேச்சிலும் வடிந்தது. வேண்டா வெறுப்பாக வாய் திறந்தார்.

''கம்மா ஏன் அவனைப் பற்றியே தோண தோணக் கிறாய்?... எனக்கென்னவோ அவனைப் பற்றி நினைத்தாலே அவமானமாக இருக்கிறது. வேறு நல்ல சேதி ஏதாவது இருந்தால் பேசு....''

நான் திகைத்து விட்டேன். அம்பரீசன்மேல் அவருக்கு ஏற்கனவே வருத்தம்தான்...ஆனால் அது இன்னும் ஆறுமலா இருக்கிறது? வியப்புடன் கேட்டேன்: ''என்ன சார், அப்படிச் சொல்கிறீர்கள்?''

''பின் என்ன! திருப்பித் திருப்பிப் பேசி மகிழும் அளவுக்கு அவனிடம் ஏதாவது பெருமையிருந்தால்பேச வேண்டியதுதான்......ஆனால் அந்தக் கழுதைதான் என் ஆசைக்





கனவுகளை யெல்லாம் தவிடு பொடியாக்கி விட்டுப் படுத்து விட்டதே குப்பை மேட்டில்.''

அவர் மனம் எனக்குப் புரிந்து விட்டது.

''ஒரேயடியாக மட்டம் தட்டாதீர்கள், சார்.... பார்க்கப் போனால் நாட்டைக் காக்கும் பணியைவிட உயர்ந்த பணி வேறு என்ன இருக்கிறது....?''

''அட, பேசாமல் இருப்பா! நம்ம வீட்டுக் குப்பை என்பதால் அது கோபுரம் ஆகிவிடுமா? ஒரு வேளை நாம் வேண்டுமானால் அப்படி நினைத்துக் கொள்ளலாம். ஆனால் மற்றவர்கள்?.... இத்தனை நாளுமாவது படித்துக் கொண்டிருக்கிறான், படித்துக் கொண்டிருக்கிறான் என்று கொஞ்சம் கௌரவமாகச் சொல்லிக் கொண்டிருந்தேன்..... இப்போது அதுவுமில்லை.... ச்சே! யாராவது கேட்டால் என்ன சொல்வது?....''

சில நிமிடங்கள் இடைவெளி விட்டு மீண்டும் தொடர்ந்தார் அவர்.

''எப்படிப்பட்ட பரம்பரை....எப்படிப்பட்ட குடும்பம். இதில் வந்து 'இது' எப்படிப் பிறந்ததோ, தெரியவில்லை... வீட்டை விட்டு ஓடிய கழுதை அப்படியே தொலைந்து போயிருந்தால்கூடப் பெற்ற கடமைக்கு இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டுவிட்டுப் பேசாமல் இருந்திருப்பேன்...''

கடைசி வாக்கியத்தைக் கூறியபோது அவர் குரல் நடுங்கியது. கண்களில் உண்மையாகவே கண்ணீர் வந்துவிட்டது.

மகன் ஒழிந்து போயிருந்தால்கூட நன்றாக இருக்கும் என்று நரசிம்மய்யா வாயளவில் சொல்லி விட்டாரே ஒழிய,

அப்படிச் சொன்னதற்காக அவர் மனம் பட்ட பாட்டை முகக் கண்ணாடி தெளிவாக எடுத்துக் காட்டியது.

நான் அதிகம் பேசவில்லை. அவர் தம் மனத்தைத் திறந்து அப்படியே கொட்டினார்.

அடேயப்பா!.... எத்தனை ஆசைகள், எத்தனை கனவுகள், எத்தனை ஏமாற்றங்கள். அவ்வளவையும் எப்படித்தான் அந்தச் சிறிய இதயக் கூட்டுக்குள் அடைத்து வைத்திருந்தாரோ மனிதர்?... ஒருவேளை எல்லாருமே இப்படித்தானோ?

நாங்கள் வீடு திரும்புவதற்குள் நன்றாக இருட்டி விட்டது. நரசிம்மய்யாவுக்கு மாலை மயங்கியவுடன் கண் பார்வையும் மங்கிவிடும். எனவே, அவரைக் கொண்டு போய் அவர் வீட்டில் விட்டு விட்டு வருவதற்காகச் சென்றிருந்தேன். அப்போது நான் அங்கே கண்ட காட்சி எனக்கே சற்று விரசமாகத்தான் தோன்றியது.

நரசிம்மய்யாவின் வீட்டு வாசலில் ஒரு 'காஸ்' விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதைச் சுற்றிப் பெரிய கும்பல், கிராமத்துச் சிறுவர்களும் முதியவர்களும் கூடி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

அம்பரீசன் கூட்டத்தின் மத்தியில் நின்று உரக்கப் பேசிக் கொண்டும், கைகால்களை வீசிக் கவாத்து நடை போட்டுக் காட்டிக் கொண்டும் இருந்தான். அதைப் பார்த்து எல்லாரும் 'கெக்கலி' கொட்டிச் சிரித்தனர். கூட்டத்திலிருந்த விடலைப் பையன் ஒருவன் கேட்டான். அம்பரீசனைவிட அவனுக்கு எட்டுப் பத்து வயது குறைவாக இருக்கும். என்றாலும் தைரியமாக 'டா' போட்டுப் பேசினான்.

''ஏன்டா அம்பு! ராணுவத்திலே கூட மண் வெட்டறதுக்கும் கூடாரம் அடிக்கிறதுக்கும் சிப்பாய்கள் இருக்கிறாங்களாமே. அதிலே நீ எந்த ரகம்டா....?''

பையனின் கேள்வியைத் தொடர்ந்து ஒரு குபீர்ச் சிரிப்பு!

அது அடங்கியபின் அம்பரீசன் சொன்னான்:

''நீ சொல்றது உண்மைதான். ஆனா அதுக்கெல்லாம் வேறே ஆளுங்க இருக்காங்க.''

இன்னொரு பையன் இடைமறித்தான்.

''அடி சக்கை! அப்படின்னா நீ அங்கே பெரிய அதிகாரின்னு சொல்லு....''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் ஒரு சிப்பாய்தான். ஆனா எங்க கம்பெனியிலே எனக்குக் கொஞ்சம் மரியாதை அதிகம்.....''

'' அது ஏன்....?''

''நான் எங்க கேப்டனுக்கு பி.ஓ. அதனால்!''

ஒரு கிழவன் கேட்டான். '' அப்படின்னா என்னடா அர்த்தம்?''

அம்பு சொன்னான். ''பி.ஓ.ன்னா பர்சனல் ஆர்டர்லி....!''

பள்ளிச் சிறுவன் ஒருவன் குறுக்கிட்டுச் சொன்னான்.

''ஆர்டர்லின்னா வேலைக்காரன்னுதானே, அர்த்தம்!.... கேப்டனுக்கு வேலைக்காரனாடா நீ?....''

ஆமாம் என்று தலையாட்டினான் அம்பரீசன்.

மறு விநாடி வெடிச் சிரிப்பு எழுந்தது அங்கே. ஒரு கிழவன் அம்பரீசனைப் பார்த்துச் சொன்னான்.

''அட, பித்துக் கொள்ளிப் பயலே! வேலைக்காரனா இருக்கிறதையா மரியாதைன்னு சொல்றே?.... உங்க தாத்தா காலத்திலே உங்க வீட்டிலேயே இருபது வேலைக்காரங்க இருந்தாங்கடா அசடு....''

வேறோர் ஆசாமி கேள்வி தொடுத்தான்.

''ஏன்டா, அம்பு! ராணுவத்திலே உன்னை எல்லாரும் என்னன்னு கூப்பிடுவாங்க?''

எங்கிருந்தோ புதிய குரல் பதில் அளித்தது.

''அங்கே மட்டும் என்ன... பித்துக் கொள்ளி அம்புன்னுதான் கூப்பிடுவாங்க!.... அதுதான் முகத்திலே எழுதி ஒட்டியிருக்குதே....''

மீண்டும் பெருஞ் சிரிப்பு. அம்பரீசன் கோபித்துக் கொள்ளவில்லை. சொன்னான்:

''அங்கேயெல்லாம் பேர் சொல்லிக் கூப்பிட மாட்டாங்க... எல்லாருக்கும் நம்பர் உண்டு. அதைச் சொல்லித்தான் கூப்பிடுவாங்க.... என் நெம்பர் சிப்பாய் செவண்டி சிக்ஸ்டி எயிட் நைண்டி செவன்....''

பரட்டைத் தலை பெண் குழந்தை ஒன்று கேட்டது. ''நீ துப்பாக்கி சுடுவேன்னு சொன்னியே, இப்போ சுடு பார்க்கலாம்....''

அம்பரீசன் தன் இரண்டு கால்களையும் அகற்றி வைத்துக் கொண்டு துப்பாக்கி சுடுவது போல் வெறும் கைகளால் பாவனை செய்து காட்டினான்.

அந்தச் சமயம் பார்த்து நானும் நரசிம்மய்யாவும் போய்ச் சேர்ந்தோம். எங்களைக் கண்டவுடன் கும்பல் கலைந்து விட்டது. நரசிம்மய்யா தம் மகனை முறைத்துப் பார்த்துக் கொண்டு ஒன்றும் பேசாமல் உள்ளே போய் விட்டார். நான் அம்பரீசனிடம் சொன்னேன்:

''என்னப்பா, அம்பு! இத்தனை வயசாகியும் இன்னும் நீ குழந்தைத்தனமாகவே இருக்கிறியே.... உனக்காக அப்பா எப்படியெல்லாம் வேதனைப்படுகிறார், தெரியுமா...?''

அவன் கேட்டான்: ''ஏன் சார் வேதனைப்படுகிறார்?''

''பின்னே என்ன! அவருக்கு இருப்பது நீ ஒரே பிள்ளை..... நீயும் இப்படி அசடாக இருந்தால்......''

''நான் அசடா சார்?''

என்ன பதில் சொல்வது அவனுக்கு?... பாவம்! நரசிம்மய்யாவுக்குப் போய் இப்படிப்பட்ட பிரகிருதி பிள்ளையாய்ப் பிறந்திருக்கிறதே...அழுவதா, சிரிப்பதா?

அன்றிரவு எனக்குத் தூக்கமில்லை. நரசிம்மய்யாவின் வேதனை ததும்பிய முகமே என் கண்களுக்குள் வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அவர் கூறியதுபோல் அவரது குடும்பம் சாதாரணமானது அல்லதான்! மிட்டா மிராக என்ற பட்டம் இல்லையே தவிர அதற்குரிய செல்வாக்கெல்லாம் அவர் குடும்பத்துக்கு இருந்தன. ஊரிலிருந்த ஆற்றுப் பாய்ச்சல் நிலத்தில் பாதிக்கு மேல் அந்தக் குடும்பத்துக்குச் சொந்தம். அதோடு வாழைத் தோட்டம், பாக்குத் தோப்பு, வெற்றிலைக் கொடிக்கால் என்று இன்னும் என்னென்னவோ!

கால ஓட்டத்தில் அவையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து இப்போ

பண்டிட்
டி.கோபாலாசார்லுவின்

# அருணா

மாதர்களின் ஆரோக்கிய
சௌபாக்கியத்திற்கு

1898 ஆண்டிலிருந்து
பிரசித்தி பெற்றது...

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட்
100, [illegible] ரோட் • சென்னை-[illegible]

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

**ஹெடன்ஸா**

உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
— ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

நாள் முழுவதும்
சந்தன நறுமணம் கமழ...

# மேட்டூர் சந்தன சோப்








**மேட்டூர் கெமிகல் &
இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்**
மேட்டூர் அணை-2 • சேலம் ஜில்லா •
தமிழ் நாடு

இருக்கும் சாதாரண நிலைக்கு வந்துவிட்டது. என்றாலும் அந்தக் குடும்பத்துக்கு இருக்க பெருமையும் செல்வாக்கும் அன்று போலவே இன்றும் இருந்தன.

செல்வம் உள்ள இடத்தில் கல்வி இருக்காது என்று சொல்வார்கள். ஆனால் அது நரசிம்மய்யா குடும்பத்தைப் பொறுத்தவரை பொய்யாகி விட்டது. நரசிம்மய்யாவே அந்தக் காலத்து எப். ஏ. படிப்புக்காரர். அவர் சகோதரர்களும் அப்படியே. சகோதரர்களின் பிள்ளைகளைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். எம். ஏ., எம். பி., பி. எல். ஸுக்குக் குறைந்தவர்கள் எவரும் கிடையாது. எல்லாரும் பெரிய பெரிய அதிகாரிகளாக உத்தியோகம் பார்த்துவருகின்றனர்.

அத்தகைய குடும்பத்தில் அம்பரீசனும் ஓர் 'அவதாரம்' எடுத்திருக்கிறான் என்றால் யாருக்குத்தான் அவமானம் உண்டாகாது?



''ஆபிஸிலே மத்தவங்க ளாம் லீவு போட்டாலும் மானேஜருக்குக் கோபம் வராது. நான் லீவு போட்டா போதும் அவருக்குக் கோபம் வந்துடும்!''

''ஆபிஸிலேயே நீங்க ஒருத்தர்தான் நல்லா வேலை செய்றவர் போலிருக்கு!''

''அதில்லே. நான் வீட்டிலிருந்து கொண்டு போற டிபன் தான் அவருக்கு ரொம்பப் பிடிக்கும்.''

கண்டு கொண்டிருந்த நரசிம்மய்யாவுக்கு அவன் அசட்டுப் பட்டம் வாங்கிக் கட்டிக் கொண்டது கண்டு நெஞ்சு கொதித்தது. அந்த ஆத்திரத்தில் ஒரு நாள் அவனை அவர் அடித்துவிட. அவனும் கோபித்துக் கொண்டு எங்கோ ஓடி விட்டான்.

ஆத்திரம் தணிந்தவுடன் பித்தாய் அலைந்தது பெற்ற மனம். மகனைக் கண்டு பிடிக்க என்னென்ன முயற்சிகளோ செய்து பார்த்தார். ஆனால் எதுவும் பலனளிக்கவில்லை.

அம்பரீசனின் நினைவு ஏறத்தாழ எல்லாருடைய மனத்திலிருந்தும் மறைந்து கொண்டிருந்தது. அந்த நேரத்தில் திடீரென்று வந்து சேர்ந்தான் அவன். இரண்டு ஆண்டுகால இடைவெளி அவன் உடலைத்தான் மாற்றியிருந்ததே தவிர உள்ளத்தை மாற்றவில்லை. அதே அசட்டுச் சிரிப்பு! கோணல் பார்வை! பித்துக் கொள்ளிப் பேச்சு!

நரசிம்மய்யாவின் மேல் எந்தவிதக் குற்றமும் சொல்ல முடியாது. என்னதான், தம் சகோதரர்களின் பிள்ளைகளைச் சொந்தப் பிள்ளைகளாகக் கருதி அவர்கள் சூட்டும் பெருமையில் பங்கு கொள்ள முயன்றாலும் அதனால் அவரது மனம் உண்மையான நிறைவைப் பெறுமா? தம் வயிற்றில் பிறந்த சொந்த மகனும் அப்படிப் படிக்க வேண்டும், பட்டம் பெற வேண்டும், புகழ் சம்பாதிக்க வேண்டும், முடிந்தால் அவர்களையெல்லாம் விடச் சிறப்பாக வாழ வேண்டும், அதைப் பார்த்து பெருமை அடைய வேண்டும் என்ற நியாயமான ஆசை அவரது உள்ளத்தில் நிறைந்து கிடந்தது.

அதற்காக அவர் செய்யாத முயற்சிகள் எதுவும் இல்லை. அம்பரீசனுக்கு என்னென்ன வேண்டுமோ, அவற்றையெல்லாம் அவன் வாய் திறந்து கேட்பதற்கு முன்பே வாங்கிக் கொடுத்தார். புத்தகம், நோட்ஸ், டியூஷன் என்று பணத்தை வாரி இறைத்தார். ஆனால் பயன்?

ஒவ்வொரு வகுப்பிலும் இரண்டு இரண்டு ஆண்டுகள் உட்கார்ந்து எப்படியோ ஒன்பதாவது வகுப்பைத் தொட்டுப் பிடித்தான். அவ்வளவுதான்! அதற்கு மேல் அவனுக்கும் படிப்புக்கும் ராசி பொருந்தவில்லை. விட்டு விட்டான்.

அம்பரீசனின் உடம்பு ஆஜானுபாகுவாக வளர்ந்திருந்தது. ஆனால் அறிவோ....? இயல்பாகவே விளையாட்டுத்தனம் நிறைந்திருந்த அவன் நாளுக்கு நாள் குழந்தையாக மாறிக் கொண்டு வந்தான். அவனது மந்தித்தனமும், கோணங்கி புத்தியும், வயதுக்குப் பொருத்தமில்லாத பேச்சும், நடவடிக்கைகளும் பித்துக்கொள்ளிப் பட்டத்தை அவனுக்கு வாங்கிக் கொடுத்தன.

தம் மகன் அறிஞனாகப் பட்டம் பெற வேண்டும் என்று அல்லும் பகலும் கனவு

இவை போதாதென்று இப்போது அவன் ஒரு சிப்பாயுங்கூட!

அவன் ஊருக்குள் கால் வைத்தபோதே வேடிக்கையும் தொடங்கி விட்டது. தனது காக்கி உடைகளையும், வட்டத் தொப்பியையும், கனமான பூட்ஸ்களையும் கழற்றாமலே ஊருக்குள் நுழைந்த அவனை முதன் முதலாக எதிர்கொண்டு அழைத்தவை தெருவில் தூங்கிக் கொண்டிருந்த சொறி நாய்கள்தாம்!

நரசிம்மய்யா தம் பிள்ளையைப் பார்த்து அப்படியே குன்றிப் போய் விட்டார். அவரது அண்ணன் பிள்ளைகள் வகிக்கும் டாக்டர், எஞ்சினியர், நீதிபதி பதவிகள் எங்கே. அவரது சொந்தப் பிள்ளை சம்பாதித்துக்கொண்டு வந்திருக்கும் சிப்பாய் வேலை எங்கே!

அம்பரீசன் வந்து மாதம் ஒன்றுக்கு மேலாகி விட்டது. அதற்குள் ஊரையே ஒரு கலக்குக் கலக்கி விட்டான். தினமும் காலை மாலையில் எழுந்தவுடன் அவன் பேரேட் பழகுவதும், கவாத்து செய்வதும், துப்பாக்கி தூக்கிச் சுடுவதும் எல்லாருக்கும் நல்ல வேடிக்கையாக இருந்தது. ஆனால் பெற்ற மனம் பெருத்த வேதனை அடைந்தது.

பிள்ளை இப்படிப் பித்துக்கொள்ளியாக இருக்கிறானே, இவன் எதிர்காலம் எப்படி இருக்கப் போகிறது? யார் மதிக்கப் போகிறார்கள்? யார் இவனுக்குப் பெண் கொடுக்கப் போகிறார்கள்? என்றெல்லாம் எண்ணி, எண்ணி மனம் குமைந்தார் அவர். அவ்வப்போது நான் அவருக்கு ஆறுதல் கூறித் தேற்றி வந்தேன்.

ஒரு நாள் காலை.

பக்கத்து நகர் போலீஸ் நிலையத்திலிருந்து போலீஸ் வேன் ஒன்று கிராமத்துக்கு வந்தது. அதைக் கண்டவுடன் கிராம மக்களுக்குக் கிலி பிடித்துக் கொண்டது. ராணுவத்திலிருந்து

# மக்களின் தேர்வு

## லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்




லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் சாதாரண டீ அல்ல!

எல்லோருக்கும் உகந்த எல்லாச் சிறப்புகளும் இணைந்தது. இயற்கையிலேயே எல்லோரும் விரும்பி ஏற்பது இது!

கெட்டியான பானம்; நிறைந்த செறிவு; சிறந்த மணம். இவை மட்டுமல்ல—ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. பருகுவதில் ஓர் இன்பம்; பிறருக்குத் தருவதிலும் ஓர் இன்பம்!

மக்களின் தேர்வு—அதுவே லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ.



**லிப்டன் என்றாலே நல்ல டீ**

LHGC.9 TAM

வந்திருக்கும் அம்பரீசனின் வீடு எது என்று போலீஸ்காரர்கள் விசாரிக்க, அவர்களை நரசிம்மய்யாவின் வீட்டுக்கு அழைத்துச் சென்று விட்டனர் சிலர்.

திண்ணையில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த நரசிம்மய்யா போலீஸ் வேனைக் கண்டு திடுக்கிட்டார். அதிலிருந்து இறங்கிய தலைமைப் போலீஸ்காரர் ஒருவர் நரசிம்மய்யாவை அணுகி அம்பரீசனைப் பற்றி விசாரித்தார்.

''என் மகன்தான் அவன். என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்று கேட்டார் நரசிம்மய்யா.

''அவரைக் கையோடு ஸ்டேஷனுக்கு அழைத்து வரும்படி சர்க்கிள் இன்ஸ்பெக்டர் உத்தரவு.''

''எதற்காக? அவன் என்ன தவறு செய்தான் ?....''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது, சார். தயவுசெய்து அவரை என்னுடன் அனுப்பி வையுங்கள்....''

அம்பரீசன் போலீஸ் வண்டியில் ஏறிய போது கிராமமே ஒன்று திரண்டு வேடிக்கை பார்த்தது.

''இந்தப் பித்துக்கொள்ளி இங்கே செய்வது போல் ராணுவத்திலும் ஏதாவது அசட்டுத்தனம் செய்துவிட்டு வந்திருக்கும். அதனால் தான் ஆளை பிடித்துக் கொண்டு போகிறார்கள் போலிருக்கிறது.....''

ஒவ்வொருவரும் தங்களுக்குத் தோன்றிய படி அந்த நிகழ்ச்சிக்குக் காரணம் கற்பித்துக் கொண்டனர்.

நரசிம்மய்யாவுக்குத் தலையில் இடி விழுந்தது போலிருந்தது. உடலும் உள்ளமும் நடுங்கின. அச்சமயம் நானும் அவர் வீட்டுக்குப் போகவே என்னையும் அழைத்துக் கொண்டு பக்கத்து நகருக்குக் கிளம்பினார்.

போலீஸ் நிலையத்தை நாங்கள் அடைந்த போது நிறைய ஜீப்களும், வேன்களும் நின்று கொண்டிருந்தன. போலீஸ்காரர்கள் சுறுசுறுப்போடும், மிடுக்கோடும் இயங்கிக்கொண்டிருந்தனர். மாவட்ட கலெக்டர், போலீஸ் அதிகாரி ஆகிய உயர்தர அதிகாரிகள் நிலையத்துக்குள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அம்பரீசனும் அவர்களுடன் சமமாக உட்கார்ந்திருந்தான்.

சர்க்கிள் இன்ஸ்பெக்டரைப் பார்க்க முயன்ற நரசிம்மய்யாவையும் என்னையும் அங்கே நின்று கொண்டிருந்தவர்கள் உள்ளே விட மறுத்தனர்.

அச்சமயம் அதைத் தற்செயலாகக் கவனித்த போலீஸ் அதிகாரி 'என்னவென்று' விசாரிக்க, மறுத்த போலீஸ்காரர் உள்ளே சென்று எங்களைப் பற்றிச் சொன்னார்.

மறு நிமிடம் எங்களை உள்ளே விடும்படி உத்தரவு பிறந்தது. நாங்கள் இருவரும் உள்ளே சென்றோம்.

நரசிம்மய்யாவைப் பார்த்தவுடன் கலெக்டர் எழுந்து வந்து, ''மிஸ்டர் அம்பரீசனின் தந்தையா நீங்கள்...? கன்கிராஜுலேஷன்ஸ்'' என்று வரவேற்புக் கூறி கைகுலுக்கினார். எங்கள் இருவருக்கும் இரண்டு நாற்காலிகள் போடப்பட்டன. உட்கார்ந்தோம்.

## வேலை பார்க்கும் பெண்!



ஹெலன் கோல் என்ற இந்த இரண்டு வயதுச் சிறுமி இப்பொழுதே சம்பாதிக்கிறாள். இவள் செய்யும் வேலை - ஓர் ஐஸ்கிரீம் தயாரிப்பு நிலையத்தில் ஐஸ்கிரீம் ருசி பார்ப்பது!

ஆதாரம்: வீக் எண்ட் - தகவல் 'பாலி'

கலெக்டர் மற்ற அதிகாரிகளுடன் ஆங்கிலத்தில் ஏதோ பேசிக் கொண்டிருந்துவிட்டு எங்கள் பக்கம் திரும்பி நரசிம்மய்யாவிடம் சொன்னார். ''கசூர் போர்முனையில் உங்கள் மகன் பித்துக்கொள்ளி வேடத்தில் எதிரியின் பாசறையில் நுழைந்து பல ராணுவ ரகசியங்களை அறிந்து வந்து சொல்லியதால் நம் ராணுவம் பல நெருக்கடிகளைச் சமாளித்து வெற்றி காண முடிந்தது. அந்தத் தீரச் செயலுக்காக இவ்வாண்டு அவருக்கு இந்திய ஜனாதிபதியின் ''வீரச் சக்கரம்'' கிடைக்கிறது. ஜனவரி இருபத்தி ஆறாம் தேதி புதுதில்லியில் நடைபெறும் குடியரசு தின விழாவில் உங்கள் மகன் தவறாது சென்று கலந்து கொண்டு ஜனாதிபதியின் விருதைப் பெற வேண்டும். அரசாங்கத்தின் இந்த உத்தரவை நேரில் தெரிவித்து வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவே அவரைக் கூப்பிட்டு அனுப்பினோம்!''

நரசிம்மய்யாவால் தம் செவிகளை நம்பவே முடியவில்லை.

அம்பரீசனுக்கு வீரச் சக்கரமா?

அசட்டுப் பிள்ளைக்கு இப்படி ஒரு மரியாதையா ? நம்ம வீட்டுக் குப்பைக்கு நாட்டுத் தலைவரின் உயர்ந்த விருதா ?

குப்பை என்பது என்ன? ஓர் இடத்தில் ஒரு சமயத்தில் பயன்படாத ஒன்றைக் குப்பை என்கிறோம். ஆனால் அதே குப்பை இன்னோர் இடத்தில் மிகப் பயனுள்ள பொருளாக ஆகி விடுகிறது. வீட்டில் கூட்டித் தள்ளப்படும் கழிவுப் பொருள்கள் தோட்டத்துக்கு நல்ல உரமாகி விடுவதில்லையா, அது போல !

நாங்கள் அம்பரீசனைப் பெருமையோடு பார்த்தோம். அவனும் வழக்கம் போல் எங்களைப் பார்த்துச் சிரித்தான். அதே அசட்டுச்சிரிப்பு! அதே பித்துக்கொள்ளிக் களை!

★இக்குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.



**செ**ன்ற மாதம் தர்மபுரியில் நடைபெற்ற இரண்டு விழாக்களுக்கு நம் மாநில மந்திரிகள் சுமார் எட்டு மணி நேரம் தாமதமாகச் சென்று விழாக்களைச் சிறப்பித்தனர்! அடுத்த நாள் கோயமுத்தூரில் ஏற்பாடு செய்யப் பட்டிருந்த விழாக்களுக்கு வேறு சில மாநில மந்திரிகள் வரவேயில்லை. வர இயலாமை யைப் பற்றி அவர்கள் தெரிவிக்கவும் இல்லை.

மாநில உத்தியோகஸ்தர்களின் வேலை நேரத்தில் எட்டுமணி மந்திரிகளின் வருகையை எதிர்நோக்கியே வீணடிக்கப்பட்டது. அடுத்த நாள் விழாக்களில் எவ்வளவு மணி நேரம் விரயமாக்கப்பட்டதோ, தெரியவில்லை.

நம் தலைவர்களும், மந்திரிகளும் வெளி நாடுகளுக்கு விஜயம் செய்துவிட்டு வந்து ''நம் மக்கள் ஆக்கவேலையில் தங்கள் நேரத்தை ஈடுபடுத்தாமல் வீணடிக்கிறார்கள். அதனால் நம் நாடு முன்னேற்றம் அடையவில்லை. ஒவ் வொருவரும் வேலை நேரத்தில் ஒருகணத்தை யும் வீணடிக்காமல் பாடுபட வேண்டும்'' என்று வீர முழக்கம் செய்கிறார்கள்.

நம் தலைவர்கள் சொல் வீரர்களாக மட்டு மில்லாமல் செயல் வீரர்களாகவும் திகழ வேண்டும் என்பது மக்களின் வேண்டுகோள்.

டால்மியாபுரம்
2-9-70 சி. ஆர். திருவேங்கடத்தான்

**ப**த்தாவது குழந்தை இலக்கியப் போட்டிக் குரிய புத்தகங்களை அனுப்பும்படி சென்ற ஆண்டு ஜூனில் தமிழக அரசு அறிவித்தது.

புத்தகங்கள் அனுப்பிப் பதினைந்து மாதங்கள் ஆகின்றன. இன்னும் முடிவுகள் வெளி வரவில்லை. தாயின் வயிற்றில்கூட, குழந்தை பத்து மாதங்களுக்கு மேல் தங்குவது இல்லை. தமிழக அரசினரின் வயிற்றில் இந்தப் புத்தகங்கள் இன்னும் எத்தனை மாதங்கள் தூங்க வேண்டுமோ, தெரியவில்லை.

தூங்கிய குழந்தையை எழுப்பி, 'இன்று பால் இல்லை, நாளை நிறையப் பால் தருவேன்' என்று தாய் கூறி உறங்கச் சொன்னதாகக் கதை உண்டு. அதுபோல் தமிழக அரசு சும்மா இருந்த எழுத்தாளர்களை ஊக்குவிப்பதாகக் கூறிப் பரிசுத் திட்டத்தைத் தெரிவித்து, உள்ள அமைதியையும் கெடுத்து விட்டனர்.

ஹைதராபாத் (முகாம்)
28-8-70 ஒரு குழந்தை எழுத்தாளர்

★ **அ**மெரிக்காவிலும் அரசியல் சாஸனம் திருத்தப்பட்டிருப்பதாக அண்மையில் செய்தி வெளிவந்திருக்கிறது.

இங்கு அடிப்படை உரிமைகளையும், அர சியல் சாஸனத்திலேயே உறுதி கூறப்பட்ட வாக்குறுதிகளையும் நீக்குவதற்காக அரசியல் சாஸனம் அடிக்கடி திருத்தப்படுகிறது.

ஆனால் அங்கோ மக்களின் உரிமைகளை உறுதிப்படுத்துவதற்காகத் திருத்தப்படுகிறது. ஆகஸ்ட் 10ந் தேதியன்று அமெரிக்கப் பிரதி நிதி சபையில் அமெரிக்க அரசியல் சாஸனத் தின் இருபத்தி ஆறாவது திருத்தம் நிறை வேற்றப்பட்டிருக்கிறது. ''ஆண், பெண் என்கிற வேற்றுமை காரணமாக அமெரிக்கா வின் எந்த மாநிலமாயினும் சட்டப்படி சம உரிமைகளை வழங்க மறுக்கவும் கூடாது; அவற்றைக் குறைக்கவும் கூடாது'' என்பது தான் திருத்தத்தின் வாசகம்.

அண்மையில் தில்லியில் ஜீவாதார உரிமை முன்னணியில் பேசிய முன்னாள் சுப்ரீம்கோர்ட் தலைமை நீதிபதி சுப்பராவ் குறிப்பிட்டபடி இங்கே ஜனநாயகம் மறைந்து நாடு சர்வாதிகாரத்தை நோக்கிப் போகிறது; ஆனால் அங்கோ ஜனநாயகம் மேலும் மேலும் வளப்படுத்தப்படுகிறது.

சென்னை
31-8-70 கே. வி. ராமதுரை

**நா**ன் சென்ற 20-6-70 அன்று, எங்கள் ஊர் பக்கமுள்ள பேராவூரணி டவுன் பக்கம் சென்று கொண்டிருந்தேன். அப்போது வழியில் ஒரு லாட்டரி டிக்கட் கிடந்ததைப் பார்த்தேன். தற்செயலாக அதை எடுத்துப் பார்க்கவும் செய்தேன். அது மே மாதக் குலுக்கலைச் சேர்ந்த தமிழகஅரசுப் பரிசுச் சீட்டு (-5-70) அதில் குலுக்கல் தேதி யும் இல்லை, எந்த வரிசையைச் சேர்ந்தது என்பதும் இல்லை. அதைத் தவிர்த்து மற்ற எல்லா விவரங்களும் அதில் இருந்தன. எந்த வரிசையைச் சேர்ந்தது என்பதும், குலுக்கல் தேதி எது என்பதும் இல்லாக் காரணத்தால், அதை நான் போலிப் பரிசுச் சீட்டு என்று எண்ணுகிறேன். அல்லது அரசின் கவனக் குறைவால் மேற்கண்டவை அச்சாக மறந் திருக்கலாம். லாட்டரி டிக்கெட்டுகளால் மக்கள் மனம் கெட்டுச் சூதாட்டவெறியில் இருக்கும்போது போலிப் பரிசுச் சீட்டுகளால் வேறு ஏமாற வேண்டுமா ?

கருப்பமலை
30-6-70 அ. அருணானந்தம்

**க**டந்த மாதம் என் மனைவியின் பிறந்த வீட்டுக்குச் சென்றிருந்த பொழுது எனது மைத்துனன் ஐந்தாவது வகுப்பு தேறி ஆறாவது வகுப்பில் சேருவதற்காக சர்டிபிகேட் வைத்திருந்தான். அதைப் பார்த்தேன். அவன் பெயர் கிருஷ்ணமூர்த்தி. ஆனால் கிருட்டிணமூர்த்தி என்று கையெழுத்துப் போட்டிருந்தான். ஏன் இப்படிப் போட் டாய் என்று கேட்டதற்கு 'ஷ்' வடமொழி எழுத்து. ஆதலால் கிருட்டிணமூர்த்தி என்று கையெழுத்துப் போடச் சொல்லி ஆசிரியர் சொன்னார் என்றான். ஆசிரிய சமூகம் அரசியல் சார்பிட்ட தங்கள் மொழிஅமைப்புக்களைக் குழந்தைகளுக்குக் கற்றுத்தர வேண்டுமா?

ராமேசுவரம் ரோடு.
4-7-70 ''ராமேஸ்வரி''

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam



# விவா

இரு செயல் புரியும் ஆரோக்கிய பானம்

## பகலில் உடலுக்கு உரமூட்டும்...
## இரவில் நிம்மதியூட்டும்!



**காலையில விவா:** பகல் முழுவதும் நீங்கள் உயிர்த் துடிப்புடன் விளங்குவீர்கள்! விவா விலுள்ள ஆடைப்பால் செழுமையாக்கப்பட்டுள்ளது—மால்ட், கோதுமை மற்றும் புரதச் சத்துக்கள் சேர்க்கப்பட்டு. இதைப் பருகினால், நீங்கள் நாள் முழுவதும் சக்திபெற்று உற்சாகமுடன் திகழ்வீர்கள்!

**படுக்கும்போது விவா:** இரவு முழுவதும் நிம்மதி யுடன் உறங்குவீர்கள்! விவாவின் புத்துணர் வூட்டும் சுவையும், ஊட்டப் பொருள்களும் உங்கள் திசுக்களுக்கு உரமூட்டி, நரம்புகளுக்கு இதமூட்டி, தசைகளுக்கு நலமூட்டுகின்றன. நீங்கள் நிம்மதி யுடன் தூங்கி, காலையில் தெம்புடன் எழுவீர்கள்!

**விவா**, எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுப் பானம்... பலவீனமானவருக்கும் உடல் தேறி வருபவருக்கும் சஞ்சீவி!

**பருகுங்கள் விவா—ஆரோக்கியமூட்டும்!**
**நீரோ பாலோ கலந்தால் இன்சுவையூட்டும்!**







இந்தியாவில் தயாரிப்போர்:
**ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**
ஜகத்ஜித் நகர், ஹமீரா (பஞ்சாப்).

விற்பனை ஏஜெண்டுகள்:
ஹோம் ப்ராடக்ட்ஸ் மார்க்கெட்டிங் ஏஜென்ஸி.
டிவிஷன் ஆப் ஸாராபாய் ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்

shilpi j.i-ta/70 tam

